


# பிலிப்ஸ்

## கேட்டீர்களா முற்றும் புதியது ?

பிலிப்ஸ் டூ-இன்-ஒன்களின்
வெகு நேர்த்தியான ஒலி இன்பம்.
ஸ்டீரியோ மற்றும் மோனோ.
எழிலோங்கும் வடிவம், கண்கவர் டிசைன்
இவற்றின் விசாலமான அணிவகுப்பு.
ஒலித்திறனிலும்
இயங்குவதிலும் சர்வதேசத்
தரத்தை வழங்குபவை.
இவற்றுக்கும் பின்பலமாக நாடெங்கும்
பரவலாக உள்ள ஸர்விஸ் வசதி.





D8334 ரூ.3400/-*



D8248 ரூ.3150/-



AR538 ரூ.2200/-*



AR448 ரூ.1800/-*



AR343 ரூ.1450/-*



AR243 ரூ.1300/-*



AR153 ரூ.1196/-**



AR151 ரூ.1095/-**



AR143 ரூ.1025/-*

## நாங்கள் வழங்குபவை தேர்வுக்குச் சிறந்தவை.

*எக்ஸைஸ் வரி உள்பட. தல வரிகள் தனி. லைசென்ஸ் தேவை இல்லை.

**பிலிப்ஸ்-ஐம்பது ஆண்டுகளுக்கும் மேலாக இந்திய வீடுதோறும் விளங்கும் நம்பகமான பெயர்**



# சென்னை வெள்ளத்தில் நமது நிருபர்கள்

* ஜெமினி பிளஷர் ராயப்பேட்டை நெடுஞ்சாலையில்...

**வெ**யில் காலத்தில் குடிசைப் பகுதிகளுக்கு மட்டும்தான் ஆபத்து; அவ்வப்போது அவை எரிந்து சாம்பலாகும். ஆனல் மழை அப்படியில்லே; அங்கிங்கெனுதபடி எங்கும், எங்கணும் வெள்ளக்காடாகி — முதலமைச்சர் எம். ஜி. ஆரே தம் ராமாவரம் தோட்டத்திலிருந்து படகில் ஏறித் தப்பித்து வர வேண்டிய அளவுக்கு — அனைவரையும் சோதனைப் படுத்திவிடுகிறது. கடந்த வாரம் சென்னையில் விடாமல் பெய்த மழையும் அப்படித்தான் ஸ்தம்பிக்கச் செய்து விட்டது. போக்குவரத்தெல்லாம் பலமாகப் பாதிக்கப்பட்டிருந்த அந்த நேரத்தில் நகரைச் சுற்றிப் பார்க்கக் கிளம்பினேம்.

* "எச்சரிக்கை! அடையாறு ஆற்றில் வெள்ளம் அதிகரித்து வருகிறது. எனவே ஆற்றை அடுத்துள்ள பகுதிவாழ் மக்கள் உடனடியாகப் பாதுகாப்பான இடத்திற்குச் செல்லும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள். கடற்படைப் படகுகள் உதவிக்காகக் கொண்டு வரப்பட்டுள்ளன. பொது மக்கள் ஒத்துழைக்கும்படி கேட்டுக் கொள்கிறேம்." ஜாபர்கான் பேட்டை பகுதியில் போலீஸார் எச்சரித்துக் கொண்டிருந்தபோது, அந்தப் பகுதியிலிருந்த நடுத்தரக் குடும்பத்தினர் சிறுகச் சிறுகச் சேமித்துக் கட்டிய தங்கள் வீடுகள் வெள்ளத்தால் சூழப்படுவதைக் கண்டு கதறிக் கொண்டிருந்தார்கள்.

"ஐயோ பூடுச்சே... எல்லாம் பூடுச்சே! எனக்கு இனிமே இன்ன இருக்கு? நான் இன்னத்தப் பண்ணுவேன்?" என்று கதறினர் ஒரு ரிக்ஷாக்காரரின் மனைவி.

* கோட்டூர்புரத்தைப் பற்றிச் சொல்லவே தேவையில்லே. ஒன்பதாண்டுகளுக்கு முன் அடையாறு ஆற்றின் பசிக்குப் பலியானது இப்போதும் பலியானது; முதல் மாடி வரை வெள்ளம் புகுந்து விட்டதால் மக்களெல்லாம் மொட்டை மாடிக்குச் சென்று கடற்படைப் படகுகளுக்காகக் காத்திருந்தார்கள். கட்டுமரங்களின், மூலமாகவும், படகுகள் மூலமாகவும் மக்கள் மீட்கப்பட்டதைப் பார்த்த போது இராமேஸ்வரத்தில் வந்திறங்கும் இலங்கைத் தமிழ் அகதிகள்தான் நினைவுக்கு வந்தார்கள்.

* கோட்டூர்புரத்துக்கு எதிர்ப்புறம் உள்ள



* அபிராமபுரத்தில்...

நந்தனம் டவர் பிளாக்கில் பல அரசு அதிகாரிகள், நீதிபதிகள் குடியிருப்பதால் அவர்களை மீட்கும் பணி தீவிரமாக நடந்து கொண்டிருந்தது. அதைக் கண்ட சாமான்ய மக்கள் இதிலும் பாரபட்சமா என்று ஆதங்கப் பட்டார்கள்.

* பாரி நகரிலுள்ள வீட்டு வசதி வாரியக் குடியிருப்புகள் மூழ்கிக் கிடப்பதைக் கண்ட போது அதற்கு 'ஏரி நகர்' என்று பெயர் மாற்றம் செய்யலாம் என்றே தோன்றியது. அப்படியொரு ஆற்றுப் படுகையில் வீட்டு வசதி வாரியக் குடியிருப்புகளைக் கட்டலாம் என்று எந்த புத்திசாலி ஐடியா கொடுத்தாரோ தெரியவில்லை!

* வழக்கமாகவே சென்னை மழை சிலருக்குத் திடீர் வேலை வாய்ப்புகளை வழங்கும். இடுப்பளவு தண்ணீரில், அங்கங்கே மாட்டிக்கொள்ளும் கார்களைத் தள்ளிக் கரை சேர்ப்பது போன்ற 'திடீர் வேலை வாய்ப்புகள்' சிலருக்கு ஒரு ரூபாய் இரண்டு ரூபாய் என்று வருமானத்திற்கு வழி செய்து கொண்டிருந்தது.



* தேனாம்பேட்டையில்...

* தெருவோரக் காய்கறிக் கடைகளிலிருந்த காய்கறிகளெல்லாம் வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்ட போது அவற்றைப் பொறுக்கி மீண்டும் அதே சாக்கடைத் தண்ணீரில் கழுவி மூட்டை கட்டியதைப் பல இடங்களில் பார்த்தோம். நோயின் ஆரம்பம் அப்படித்தான் இருக்குமோ?

* நிவாரண முகாம்: எல்லோருக்கும் இடை... உண்டா?







* மீட்புப் பணியில் கட்டுமரங்கள்.





* கோட்டூர்புரத்தில் மீட்புப் பணி...



* அண்ணா மேம்பாலத்தின் கீழுள்ள நுங்கம்பாக்கம் ஹைரோடில்...



* வால்டாக்ஸ் ரோடில்...

* ஐஸ் அவுஸ் பகுதிக்குச் சென்ற போது அந்தப் பகுதியில் கடல் சுமார் நூற்றைம்பது அடி தூரத்திற்கு உடைப்பெடுத்து வந்திருந்தது. அதில் ஓர் ஆணின் பிணம் கேட்பாரற்றுக் கிடந்தது.



* சோகத்திலும் ஒரு சுகம்?

* அண்ணா சமாதி பக்கத்தில், மூன்று கோடி ரூபாய் செலவில் புதிதாக வாங்கப்பட்ட ரோடு போடும் இயந்திரம் பாதுகாப்பே இல்லாமல் அடைமழையில் நனைந்து கொண்டிருந்தது. ''ஏன்யா இந்த இயந்திரம் நனைந்தால் ஒன்றும் ஆகாதா?'' என்று அங்குள்ள காவலாளியைக்கேட்டபோது, ''அதெல்லாம் ஒண்ணும் ஆகாதுப்பா!'' என்றார்.

* மவுண்ட் ரோடுக்கு வந்தபோது முள்ளின் மேல் நடப்பதுபோல் இருந்தது. ஆம்; அந்த அளவுக்கு மவுண்ட்ரோடே மழையால் அரிக்கப்பட்டிருந்தது.

* மழையால் பாதிக்கப்பட்டவர்கள் அடைக்கலம் புகுந்திருந்த சில முகாம்களைச் சுற்றி வந்தபோது, எல்லா முகாம்களிலும் அவசர மருத்துவத்திற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்ததைக் கண்டு பாராட்டாமல் இருக்க முடியவில்லை. ஆனால் உணவு வழங்கிய முறை தான் சரியில்லை. அதில் 'லோகல் பாலிடிக்ஸ்' புகுந்து கொண்டதால் சிலருக்கு உணவே கிடைக்காமலும் போய்விட்டது.

* நிவாரண முகாம்களிலிருந்த மக்களிடம், அரசியல்வாதிகளைப் பற்றிப் பேசிய போது, ''அவனவன் வந்து வேடிக்கை பார்த்துட்டு, விளம்பரத்துக்காகப் போட்டோ எடுத்துக்கிணு போறானுங்களே தவிர, எங்கள் துக்கத்தைப் பகிர்ந்துக்கிட்டுப் போற மாதிரி இல்லே!'' என்று சிலர் சீறி விழுந்தார்கள்.





* வேலைக்கும் இயந்திரமா? துணி காயப் போடும் இயந்திரமா?



* கடற்கரையோரத்தில் ஒதுங்கிக் கிடந்த பிணம்.



* கொட்டும் மழையில் ரோடு போடும் இயந்திரம்.





* வெறும் ஜல்லிகளாய் உருமாறிவிட்ட மவுண்ட் ரோடு.

* பெரினா கடற்கரையை அழகுபடுத்துவதற்காக அங்கிருந்த கட்டுமரங்கள் அப்புறப் படுத்தப்பட்டு விட்டதால், மீட்புப் பணிக்குத் தேவைப்பட்ட கட்டுமரங்களை ராயபுரத்திலிருந்து கொண்டுவர வேண்டியதாகி விட்டது!

* இந்த மழையின்போது டெலிவிஷனில் புயல் எப்படி உருவாகிறது என்பதை டாகுமெண்டரி மாதிரி தயாரித்து வழங்கினார்கள். அதை அழகான கவிதையாக வர்ணனை செய்தவர் தமிழன்பன். அது சரி; மழையைத் தொடர்ந்து வெள்ளியன்று காட்டப்பட்ட ஒளியும், ஒலியும் நிகழ்ச்சியில் எம். ஜி. ஆர். மழையில் நனைந்து கொண்டே மக்களை ஆறுதல் படுத்தும் 'சந்திரோதயம்' படப் பாடலைக் காட்டினார்களே, அது யாரைத் திருப்திப் படுத்துவதற்காக? கடைசியில், அரசியல்வாதிகளும், அரசு அதிகாரிகளும் ஊழியர்களும் இதுபோன்ற 'சீப்'பான விளம்பரங்களில் கவனம்செலுத்துவதைவிட்டுவிட்டு, ஆபத்து வரும் முன்பே மக்களைக் காக்கும் நடவடிக்கைகளில் கவனம் செலுத்தினால் எத்தனை வெள்ளம் வந்தால்தான் என்னவாகி விடும் என்ற ஏக்கப் பெருமூச்சுத்தான் எங்களுக்கு மிஞ்சியது.

படங்கள் :

**சுபா சுந்தரம், யோகா, ரவி, எட்வர்ட்.**



* இத்தனை புயலிலும் துணையைப் பிரியாத பூனைகள்!



**கல்கி**

1985 நவம்பர் 24
மலர் 44 இதழ் 17
குரோதன கார்த்திகை 9



# பிரதமரின் விஜயம் — பெரிய ஏமாற்றம்!

எதிர்ப்பக்கத்தில் உள்ள கார்ட்டூனில் ராஜீவ் பொழியும் மூட்டைகள் வெறும் மணல் மூட்டைகளாக இருந்துவிடக் கூடாதே என்ற கவலையில் ஆழ்ந்து போயிருக்கிறோம்! தமிழகத்துக்கு ராஜீவ் வந்தபோது அவர் கூறியவற்றை மறுநாள் காலை அசைபோடும்போது அவரது விஜயம் தமிழக மக்களுக்கு ஒரு பெரிய ஏமாற்றம் என்றே கணிக்க வேண்டியுள்ளது. ஹெலிகாப்டரில் ஏறித் தமிழக மாவட்டங்கள் சிலவற்றையும் சென்னை நகரையும் புதுவையையும் சுற்றி வந்து வெள்ளச் சேதத்தைப் பார்வையிட்ட பிறகு தமிழகத்துக்குப் 15 லட்சம் புதுவைக்கு 5 லட்சம் என்று அறிவித்ததைக் கஞ்சத்தனம் என்றால் கூடப் போதாது; மக்களின் துயரை உணர்கிற சக்தியில்லை என்றும் எடைபோடத் தேவையிருக்கிறது. வெள்ளச்சேதம் பற்றிய தமிழக அரசின் மதிப்பீடு மிகையாக இருக்கலாம். 90 கோடி கேட்டால்தான் 50 கோடியாவது கிடைக்கும் என்ற கருத்தில் கேட்டிருக்கலாம். எனினும் உடனடி நிவாரணத்துக்கு 30 கோடி தருமாறு தமிழக அரசு வேண்டுகோள் விடுத்திருக்கும்போது பிரதமர் குறைந்தபட்சம் இருபது கோடியாவது அறிவித்திருக்கலாம். இதைச் செய்யாமல் பிரதமரின் நிவாரண நிதியிலிருந்து ஒரு அற்பத் தொகையை அறிவித்துவிட்டு வெள்ளச் சேதத்தைக் கணிக்க நிபுணர் குழு வரும் என்று பிரதமர் சொன்னது புயல் தாக்கியதைவிடவும் பலத்த அடி. தமிழக அரசு ஏற்கெனவே கேட்டுள்ளபடி மாதாந்திர அரிசி ஒதுக்கீட்டையாவது மத்திய அரசு இந்த வெள்ளப் பாதிப்பை உத்தேசித்தேனும் அதிகரிக்குமா என்று பத்திரிகையாளர் கேட்டதற்குக் கூடப் பிரதமர் சாதக பதில் கூறாமல் பூசி மெழுகிவிட்டார். எல்லாமாகச் சேர்ந்து தமிழகத்தை அவர் ஒரு ஆபத்தான சமயத்தில் காப்பாற்ற முன் வராமல் கைவிட்டு விட்டது போன்ற எண்ணத்தையே ஏற்படுத்துகிறது. நாளைக்கே ஒரு நிபுணர் குழு வந்து ஆய்வு நடத்தி அவருக்கு உண்மைகளை உணர்த்த, பிரதமரும் அள்ளிக் கொடுப்பாராயிருக்கலாம். ஆனால், எதையும் காலத்தோடு செய்தால்தானே மதிப்பு?

தமிழக அரசின் குறைபாடுகளைச் சுட்டிக்காட்டுவதும் நமது கடமையாகிறது. ஆபத்து வந்த பிறகு, ''ஐயோ'' என்று அலறுவதைவிட வருமுன் காப்பது நலம். இதில் இன்றைய ஆட்சி கவனம் செலுத்துவதேயில்லை. ''விஞ்ஞான நோக்கு; விஞ்ஞான நோக்கு'' என்று நாளைக்கொருதரம் வற்புறுத்தும் பிரதமரைக் கொண்டிருக்கும் நாட்டில் மாநில அரசு இன்ஸாட் விடுத்த எச்சரிக்கையைக் கூட அலட்சியம் செய்து விட்டதை மன்னிப்பதற்கில்லை. சனிக்கிழமையன்றே கிடைத்துவிட்ட இன்ஸாட் எச்சரிக்கைக்கு மதிப்பளித்து உடனடியாகத் தாழ்வான பகுதிகளில் உள்ள மக்களை முக்கிய உடைமைகளுடன் பாதுகாப்பான இடத்துக்குப் போகச் செய்திருந்தால் பொருட்சேதத்தைத் தவிர்க்க முடியாதாயினும் மக்களுக்குத் துன்பத்தைத் தவிர்த்திருக்கலாம். மதுராந்தகம் ஏரி உடைப்பெடுக்கக் கூடும் என்பது கூட உணரப்படவில்லை, உணர்ந்திருந்தால் முன்னெச்சரிக்கை நடவடிக்கைகள் எடுக்கப்படவில்லை. செம்பரம்பாக்கம் ஏரியின் நாலாவது புதிய மதகு திறந்துவிடப்பட்டால் என்ன ஆகும் என்பது கூட அதிகாரிகளுக்குத் தெரியாமலே இருந்திருக்கிறது! இதைவிட ஆச்சர்யம், முன் ஜாக்கிரதையாகத் தொலைதூர பஸ்கள் போக்குவரத்தை ரத்து செய்துவிடலாம் என்று தோன்றாமல் போனதுதான். இதன் விளைவாகத் தந்தை பெரியார் போக்குவரத்துப் பேருந்து ஒன்று வெள்ளத்தில் அடித்துப் போகப்பட்டு 55 உயிர்களைப் பலி வாங்கிவிட்டது. ஆற்றோரங்களில் தாழ்வான பகுதிகளில் ஆபத்தான சூழலில் குடிசைகள் தோன்றுவதைத் தடுக்காமல் அரசியல் காரணங்களுக்காகச் சும்மா பார்த்துக் கொண்டிருக்கும் பொறுப்பற்ற அரசு இப்போது வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட அதே மக்களுக்குப் பதில் கூற வேண்டிய பொறுப்பில் உள்ளது. சென்னை நகரச் சாலைகள் ஒவ்வொரு மழைக் காலத்திலும் ஆறாக மாறுவது நமக்குப் பழக்கமாகி விட்டதென்றாலும் வடிகால் வாரியம் என்றுதான் விழித்துக் கொள்ளப் போகிறதோ என்ற கேள்வியும் ஆண்டுதோறும் எழத்தான் செய்கிறது.

வெள்ள நிவாரணத்துக்கென்று மத்திய மாநில அரசுகள் ஒதுக்கும் தொகையில் எவ்வளவு பாதிக்கப்பட்ட மக்களை மெய்யாலுமே சென்றடையும்; எவ்வளவு இடைவழியிலேயே விழுங்கி ஏப்பம் விடப்படும் என்பதை எண்ணும்போது வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட மக்களிடம் நமக்கு ஏற்பட்டிருக்கும் பரிதாபம் இரட்டிப்பாகிறது.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா—பாரதியார்.

### நான் முழுவதும் சிரித்தேன்!

* முதல் பக்க சிரிப்பு ஸ்நானப் பக்கத்தில் மூழ்கி நனைந்ததினால் அன்று முழுவதும் சிரித்துக் கொண்டே இருந்தேன்!

மோகனூர்—15. வி. பாலகிருஷ்ணன்.

### புண்ணியம் கட்டிக் கொண்டீர்கள்!

* கங்கை சுத்திகரிப்பு—ஒரு பாவ மன்னிப்பு என புனித கங்கைக்கு இன்று ஏற்பட்டுள்ள சுற்றுப்புறக் கேட்டினை மிக அழகாகக் கோடிட்டுக் காட்டி நீரும் ஸ்ரீனிவாசனும் புண்ணியம் தேடிக் கொண்டு விட்டீர்கள்.

கரூர், இரா. வளையாபதி.

### தொடரட்டும் பணி!

* ஒற்றுமை என்ற போர்வையில் குற்றவாளிகள் ஒளிந்து கொள்ள இடம் தந்து விடக் கூடாது என்ற தலையங்க வரிகள் உண்மையிலேயே பொன்னால் பொறிக்கப்பட வேண்டியவை. ஆனால் நீர் என்னதான் கரடியாகக் கத்தினாலும் யாரும் கேட்கப் போவதில்லை. உம்மைத்தான் 'பைத்தியக்காரன்' என்று முத்திரை குத்தினாலும் குத்துவார்கள்; என்றாலும் தொடரட்டும் உங்கள் பணி.

பெங்களூர்—10. வி. ரமேஷ்.

### கண்டிக்கிறோம்!

* 'மஸாஜ்' கிளப்பில் பணிபுரியும் பெண்மணி சாந்திக்கு இழைக்கப்பட்ட கொடுமை கண்டிக்கத்தக்கதாகும். இக்கொடுமையை எதிர்த்து அவர் வழக்குத் தொடுத்துள்ளது போலீஸ் நிர்வாகத்திற்குக் கொடுக்கப்பட்டுள்ள முதல் சவுக்கடியாகும்.

குடியாத்தம், கே.கே.ஆர்.எச். கோபி.

### சோக வெடிகள்!

* வாசகர் (பங்கு)களின் 'உள்ளத்தை உலுக்கிய நிகழ்ச்சி'கள் ஒவ்வொன்றும் உள்ளத்தை அதிர வைத்த சோக வெடியாய் அமைந்தது!

கும்பகோணம்—1. பா. கிருஷ்ணதாஸ்.

### அந்தரங்கமல்ல; பகிரங்கம்!

* இரண்டு கிளைமாக்ஸ், இரண்டு முற்றும்களுடன் 'ஷ்.... அந்தரங்கம்' கதை புதுமையாய் இருந்தது என்பது 'பகிரங்கம்.'

கோவை, உமார்த்தி.

* துரைராஜைதான்கொலைசெய்துவிட்டதாக நினைத்துக் கொண்டு, சபாபதி செய்யும் சாமர்த்தியமான திட்டங்களை கூறி 'சபாஷ்' பெறுகிறார் எழுத்தாளர். ப. கோ. பி.

கும்பகோணம்—1. பி. சுவாமிநாதன்.

* இந்த இதழ் என்ன சிறுகதை சிறப்பிதழா? அனைத்து சிறுகதைகளும் அருமையாக இருந்தனவே!

தோப்புத்துறை—9. ஹெச்.கே. நாசர்.

### கள்ளிக்கோட்டைதான் சரி!

* 'உலக அரங்கில் உஷா' கட்டுரையில் (27.10.85 கல்கி) கோழிக்கோடு என்பதைச் சிலர் தவறுதலாகக் கள்ளிக்கோட்டை என்று சொல்லி வருவதாகக் கூறப்பட்டுள்ளது. கி.பி. 10ம் நூற்றாண்டுக்குப் பின்புதான் மலையாள மொழியே தோற்றுவிக்கப்பட்டுள்ளது. அதற்கு முன்பு அப்பகுதி முழுவதிலும் தமிழே வழக்கிலிருந்து வந்துள்ளது. கள்ளிக்கோட்டை என்பது அந்தக்காலத்தில்ஏற்பட்ட பெயர். ஆங்கிலேயர் அதனை Calicut என்று சிதைத்தனர். அதுவே அண்மையில், 'கோழிக்கோடு' எனமாற்றப்பட்டுள்ளது. இருப்பினும் அதன் இயற்பெயரான கள்ளிக்கோட்டை என்பதும் இன்றும் வழக்கிலிருந்து வருகிறது.

கோவை சதாசிவம்.

### விளக்கேற்ற உதவுங்கள்!

* என் கணவர் பால்ராஜ் அவர்கள் இரு சிறு நீரகங்களும் பாதிக்கப்பட்டு தற்போது கோவை வேதநாயகம் மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டுள்ளார். 'டயாலிசிஸ்' சிகிச்சை பெற்று வரும் அவர் மாற்றுச் சிறு நீரக சிகிச்சை மூலமே மறுவாழ்வு பெற இயலும் என்றும் அதற்கு ரூ 50,000/—செலவாகுமென்றும் டாக்டர்கள் சொல்கிறார்கள். வருமானம் அதிகம் இல்லாத ஏழைக் குடும்பத்தைச் சேர்ந்தவள் நான். திருமணமாகி இரண்டு ஆண்டுகளே ஆகிய நான் தற்போது நிறை மாத கர்ப்பிணி. சிகிச்சைக்கான செலவினை நல்ல இதயம் படைத்தவர்களும், தர்மஸ்தாபனங்களும் தந்துதவினால்தான் இந்த ஏழைப் பெண்ணின் இல்லத்தில் விளக்கேற்றும்; என் கணவர், புது வாழ்வு பெறுவார்.

பி. ராஜேஸ்வரி,
4/17 C, சரவண நகர்,
கவுண்டம்பாளையம்,
கோயம்பத்தூர்—641 030.



**கொசுக்கள் உங்கள் தூக்கத்தைக் கெடுக்கின்றனவா ?**



**உபயோகியுங்கள் ஓடோமாஸ்–**
**உறங்குங்கள் நிம்மதியாக**




**BALSARA** **ஓடோமாஸ்**
**கொசுக்களின் எதிரி**

CHAITRA-B BLS 546 TAM

---

# தபால் மூலம் சித்திரக்கலை !



## படம் வரைய,
## வர்ணம் தீட்ட வேண்டுமா ?



28 வருடங்களுக்கும் மேலாக, தங்கள் நம்பிக்கைக்கும், திறமைக்கும் பெயர் பெற்ற

# சந்தனுவின்
# சித்திர வித்யாலயத்தின் மூலம்

தபால் மூலம், தமிழ், ஆங்கிலம், மலையாளம், தெலுங்கு, ஹிந்தி ஆகிய 5 மொழிகளில் வீட்டிலிருந்தபடியே தங்களின் சித்திர ஈடுபாட்டையும், திறமையையும் பயனுள்ள முறையில் முன்னேற்றிக் கொள்ளலாம்.

முழு விவரங்களுக்கு 90 பைசா தபால் தலைகளுடன் விண்ணப்பிக்கவும்

**சந்தனுவின் சித்திர வித்யாலயம்**
C/o. சித்திரக் குள்ளன் (KD), சிந்தாதிரிப்பேட்டை,
சென்னை-600 002. போன்: 846188




Modern/SCW/ 30

## நீங்கள் கேட்டவை — தராசு

# தீபாவளியன்று உம்மை

* உலகநாதன், லால்குடி.

**? தீபாவளியன்று உம்மைப் பாதித்த நிகழ்ச்சி என்ன?**

! தமிழகமெங்கும் மழையால் பாதிக்கப் பட்டுக் கொண்டிருக்கும்போது நமது தமிழக முதல்வர் ஹாய்யாகச் 'சின்ன வீடு' படம் பார்த்துக் கொண்டிருந்ததை அறிந்து நொந்து போனேன்.

* ரேவதி ப்ரியன், ஈரோடு—1.

**? மெரினா கடற்கரையை அழகு படுத்துவதாகச் சொல்லி மீனவர்களின் கட்டுமரங்களைக் கைப்பற்றியது குறித்து...?**

! அழகு படுத்தத்தான் என்று அரசு தரப்பில் கூறப்படுவதை அடியோடு மறுக்கிறார் நெடுமாறன். அவர் கூறுகிறார்:

இது இறால் மீன் அதிகமாகக் கிடைக்கும் ஸீஸன். குறிப்பாக மெரினா கடற்கரையோரப் பகுதியில்தான் படு அதிகம். அந்த ஓரத்தில் மட்டும் இந்த ஸீஸனில் சுமார் ஒரு கோடி ரூபாய் மதிப்புள்ள இறால் மீன்கள் கிடைக்கும். அதைச் சிறு மீனவர்கள் பிடித்து அனுபவித்து வந்தார்கள். இது பொறுக்காத விசைப் படகுக்காரர்கள் தாங்களே அந்த இறால்களைப் பிடிக்க வசதியாகச் சம்பந்தப் பட்டவர்களுக்குச் 'சம்திங்' கொடுத்து சிறு மீனவர்களின் கட்டு மரங்களையே அப்புறப் படுத்திவிட்டார்கள். இதுதான் உண்மைக் காரணமே தவிர, கடற்கரையை அழகு படுத்தும் நோக்கம் அல்ல!

* எம். இராசன், கிருஷ்ணகிரி.

**? வண்ணத்துப் பூச்சிகளின் அழகையும் கவர்ச்சியையும் பார்க்கும் போது என்ன தோன்றும்?**

! ஒவ்வொரு முறையும் ஒவ்வொன்றாய்த் தோன்றும். அவற்றில் ஒன்று; வண்ண வண்ண உடைகளில் பள்ளிக்கூடத்திற்குச் செல்லும் சின்னச் சின்னக் குழந்தைகளைப் பார்ப்பதுபோல் மனம் குதூகலிக்கும். இரண்டு: பறக்கும் பரவசமே... என்ற மதிவண்ணனின் கவிதை வரிகள் தோன்றி மனம் சிலிர்க்கும். மூன்று: கோ—ஆப்டெக்ஸ் நினைவுக்கு வரும்; அதோடு அதன் விளம்பரங்களில் அதிகமாகத் தோன்றும் ரேவதியின் துடிப்பான முகமும் நினைவுக்கு வரும்.

* ஆர். இளங்கோ, ஏந்தல்.

**? 'அராபத்துக்கு ஆதரவு தருகிறார் ராஜீவ்; அவரை விட ஆதரவற்றவனா தமிழன்? தகுதியற்றவனா தமிழன்?' என்று அன்பழகன் கேட்கிறாரே?**

! பாலஸ்தீன விடுதலை இயக்கத்தினரை விட இலங்கைத் தமிழர்களை எள்ளளவும் குறைத்து மதிப்பிடவில்லை ராஜீவ். அன்பழகனைப் போன்றோரின் வழிமுறைகளிலிருந்து தான் வேறுபடுகிறார் அவர். வேண்டுமானால் இலங்கை அரசுடனான உலக நாடுகளின் வியாபாரத் தொடர்பைத் தற்காலிகமாக நிறுத்தி அதன் மூலம், இலங்கை அரசுக்கு ஒரு நெருக்கடியை உருவாக்கித் தீர்வுக்குச் சம்மதிக்க வைக்க ராஜீவ் கடும் முயற்சி எடுக்கவில்லை என்று குறை சொல்லலாம். இப்படிப்பட்ட ஆக்கபூர்வ யோசனைகளைக் கூற அன்பழகனுக்குத் தோன்றாமல் போனது தான் வியப்பு!

* கிங்லி அஹ்மது, சென்னை—1

**? யாரையேனும் எதிர்த்து எழுதி, அதனால் மிரட்டல் வந்த அனுபவம் உண்டா?**

! மிரட்டல்களுக்கு என்ன பஞ்சம்! தினந்தோறும் வந்தவண்ணம்தான் இருக்கின்றன. ஆனால் அதற்கெல்லாம் நாங்கள் ஒரு போதும் அஞ்சப் போவதில்லை.

* குமரி ஜெய், சென்னை—5.

**? ரோடு போடப் போகும் இயந்திரத்தை இயக்கும் விழா எப்படி?**

! விழாவைப் பற்றியும் அந்த இயந்திரத்தின்மேல் வைக்கப்பட்டிருந்த எம். ஜி. ஆர். படத்தைப் பற்றியும் சொல்லுவதைவிட இயந்திரத்தைப் பற்றிச் சொல்லுவதுதான் பிரயோஜனமாக இருக்கும். அந்த இயந்திரத்தின் மூலம் நிறையச் செலவு மிச்சமாகும். இப்போது சாலையைப் புதுப்பிக்கும்போது பழைய தார் சாலை மேலேயேதான் புது தார், ஜல்லி கலவையைப் போடுகிறார்கள். ஆனால்


* வண்ணத்துப் பூச்சி


* அர்த்தமற்ற கேள்வி

## பாதித்த நிகழ்ச்சி என்ன?


* ராஜீவில் ஆட்டம்


* மூவாசி போகாது

அந்த இயந்திரம் பழைய தார், ஜல்லியையே மீண்டும் உருக்கிக் கலந்து — தேவையான அளவில் புது கலவையைச் சேர்த்துச் சாலையைப் புதுப்பிக்கும்திறன் படைத்தது. இதனால் நிறையப் பணம் மிச்சமாகும். சாலையின் உயரமும் அதிகரித்துக் கொண்டே போகாது. அதனால் மழைக்காலத்தில் வீதி நீர் வீட்டுக்குள் வழியாது.

* ராம்தினகர், கவுந்தப்பாடி.

? சிங்கப்பூர் போல இந்தியா முன்னேற வேண்டுமானால்நட்சத்திர ஓட்டல்களை நிறுவ வேண்டும் என்று அமைச்சர் திருநாவுக்கரசு சொன்னது பற்றி...?

! ஒரு நாடு முன்னேறுவதற்குப் பல காரணங்கள் இருக்கின்றன. நட்சத்திர ஓட்டல்களை நிறுவினால் மட்டும் நாடு முன்னேறி விடாது. சிங்கப்பூரின் முன்னேற்றம் நட்சத்திர ஓட்டல்களால் அல்ல! ஆமாம்; நாட்டு முன்னேற்றம்பற்றிக்கூடவா நமது அமைச்சர்கள் பேச ஆரம்பித்து விட்டார்கள்?

* த. சத்தியநாராயணன், அயன்புரம்.

? ரசிகர் மன்றங்கள் அமைக்கும் வழக்கம் சினிமா ரசிகர்களிடையே இல்லாதிருந்திருந்தால்...?

! யார் கண்டது? எம். ஜி. ஆர். முதலமைச்சராகாமல் இருந்திருக்கலாம். அதனால் தமிழ் நாட்டின் சரித்திரமே வேறு மாதிரி இருந்திருக்கலாம்!

* கோ. க. சுரேஷ், கோவை — 9.

? கபில்தேவ் மீண்டும் காப்டனாக்கப்பட்டுள்ளாரே?

! அடுத்த கேப்டன் யார் என்ற சர்ச்சையைத் தற்காலிகமாகத் தள்ளி வைத்திருக்கிறார்கள்: அவ்வளவுதான்.

* முருகேசன், தேனி.

? அணு ஆயுதக் குவிப்பை ஐம்பது சதவீதம் குறைக்கலாம் என்று அமெரிக்க அதிபர் ரேகன் அறிவித்துள்ளது பற்றித் தங்கள் கருத்து என்ன?

! அப்படிக் குறைத்தாலும் கூட இந்த உலகத்தை ஐந்து முறை அழிக்கக் கூடிய அளவுக்கு வல்லரசுகளிடம் அணு ஆயுதங்கள் இருக்கும். நூறு சதவீதமும் குறைத்தால்தான் அனைவரும் நிம்மதியடையலாம்.

* எஸ். ஆர். லதா, அய்யம்பேட்டை.

? முன்னாள் கள்ளுக்கடை மறியல் தியாகிகளின் வாரிசுகள் எல்லாம் சாராயக்கடை ஏஜென்ஸி கேட்கிறார்களாமே?

! முன்பு இருந்த தியாகிகள் பதநீர் குடித்தார்கள்; அதனால்தான் கள்ளுக்கடை மறியல் செய்தார்கள். இப்போது உள்ள வாரிசுகள் சாராயம் குடிக்கிறார்கள்; அதனால்தான் ஏஜென்ஸி கேட்கிறார்கள்.

* ரஜினி சுகுமார், சென்னை — 11.

? அ. இ. அ. தி. மு. க. மந்திரிசபை கவிழ்ந்தால் எப்படி இருப்பீர்?

! கப்பலா கவிழ்ந்தது? கட்சிதானே கவிழ்ந்தது என்று சமாதானப்படுத்திக் கொண்டு விடுவேன். அநியாயமாகக் கவிழ்க்கப்பட்டால்தான் கோபப்படுவேன்.

* அ. சிவாராவணன், விருத்தாசலம்.

தமிழக அமைச்சர்களில் அப்பாவி யார் யார்?

! அடுத்த அமைச்சரவையிலாவது நீங்கள் குறிப்பிடும் அப்பாவிகள் நியமிக்கப்பட்டால் அப்போது சொல்கிறேன்.

* ரூ. 10 பரிசு பெறுபவர்:
ஆர். இளங்கோ,
ஏந்தல் (அஞ்சல்),
தென் ஆற்காடு
பின்: 605 801.


* பாதிக்கிறது


* மீண்டும் காப்டன்

இரட்டைச் சம்பள விகிதம் கூடாது. போனஸ் வேண்டும்... என்று மொத்தம் பத்துக் கோரிக்கைகளை முன் வைத்து, தமிழ்நாடு முழுவதிலுமுள்ள பள்ளிக்கூட ஆசிரியர்கள் உண்ணாவிரதம் — மறியலில் ஈடுபட்டு, ஆயிரக் கணக்கில் கைது செய்யப்பட்டு, ஆங்காங்கே சிறையில் இருக்கிறார்கள். கடலூர் மத்திய சிறைச்சாலையில் ஒரு ரவுண்டு அடித்த நமது நிருபர் எழுதுகிறார்:

* கடலூர் பஸ் ஸ்டாண்டில் இறங்கி, டவுன் பஸ்ஸில் 50 காசு பயண தூரத்தில் இருக்கிறது கேப்பர் குவாரி. இங்கேதான் இருக்கிறது கடலூர் மத்தியச் சிறைச்சாலை.

* கைதானவர்களை வைக்க இடமில்லாமல் கடலூரிலிருந்து வேலூருக்குக் கொண்டு போய், அங்கேயும் இடமின்றி சேலம், திருச்சி என்று அலைந்தார்களாம் போலீஸார்.

* ஆங்காங்கே கல்யாண மண்டபங்களில் போலீஸ் காவல் போட்டு ஆசிரியர்களைக் காவலில் வைக்கவும் ஏற்பாடு நடக்கிறது.

* கடலூர் ஜெயிலின் உள்ளே இரண்டு ஆள் உயரத்துக்குக் கம்பி வேலி. அந்தப் பக்கத்தில் ஹால்கள். ஆசிரியர்கள் ஊர்வாரியாக அடைக்கப்பட்டிருந்தனர். அந்தந்த ஊர்ப்பெயரை அட்டைகளில் எழுதி மாட்டி வைத்திருந்தனர். உள்ளே செல்லும் விசிட்டர்களிடம் ஐம்பது பைசா வசூலித்துக் கொண்டு, டோக்கன் கொடுத்துத் தான் அனுப்புகிறார்கள்.

* ஒரு சின்னக் கும்பலிடம், காவல்காரர்; "சார்! நேரமாவுது! புறப்படுங்க!" என்று சொல்லியும் அவர்கள் கிளம்பாததால் கொஞ்சம் அதட்டியபடி லேசாய்த் தள்ளினார். அந்தக் கும்பலில் இருந்த இரண்டு பேர், "யோவ்! நாங்க ரெண்டு பேரும் உள்ள இருக்க வேண்டிய ஆளுங்க! எங்களையும் போகச் சொல்றியே!" என்று சிரித்தபடியே சொல்ல, போலீஸ்காரர், "என்ன சார்! நீங்க வேலிக்கு அந்தப் பக்கம் தானே இருக்கணும். இங்க வந்து பெஜார் பண்றீங்களே! உள்ளே போ சார்" என்றார்.

* "பார்க்க வந்த பெண்மணி ஒருவர், தன் கணவனைப் பார்த்ததும் ஓவெனக் கதற, அவரோ, "தே! நான் என்ன திருடிட்டு, கொலை செஞ்சிட்டா ஜெயிலுக்கு வந்திருக்கேன்! அரசாங்கத்தை எதிர்த்துப் போராடறோம் புள்ள! ஏன் நீ அழுவுற?" என்று தேற்றினார்.

* அத்தனை ஆசிரியர்களுக்கும் ஒரே மனக்குறை! எம். ஜி. ஆர். தீபாவளிக்காவது ஆசிரியர்களை ரிலீஸ் பண்ணிவிடுவார். பண்டிகையைக் குடும்பத்துடன் கொண்டாடலாம்" என்று. ஆனால் வாத்தி யாரோ, வாத்தியார்கள் ஆசையில் மண்ணைப் போட்டுவிட்டார்.

# ஆசிரியர்களுக்கு ஜெயிலில் தீபாவளி!



* ஒருவர், பிள்ளைங்களை ஜாக்கிரதையா பட்டாசுவிடச்சொல்லு.சுட்டுக்கப்போவுதுங்க" என்று செய்தி சொல்லி அனுப்பினார் வந்திருந்தவரிடம்.

* டோக்கனைத் திருப்பித் தந்துவிட்டு வெளியே வரும்போது, ஒரு துண்டுப் பிரசுரம் தந்தார் ஒருவர்," ஆயிரம் ஆயிரம் ஆசிரியர்கள் சிறையில் இருக்கும்போது நமக்குத் தீபாவளி தேவைதானா?" என்று கேட்டது அந்தப் பிரசுரம்.

தொகுப்பு : எஸ். சந்திரமௌலி

ஸன்ரைஸ் ஊட்டும் புத்துணர்வையும் மணத்தையும்
புதிய ஸன்ரைஸ் தம்ளரில் பருகிடுங்கள்!

# இலவசம்

ஒவ்வொரு 200 கிராம் ரீஃபில் பேக்குடனும்.




தம்ளரின் அடியில்
'ஸன்ரைஸ்' பெயர்
இருக்கிறதா
என்று பாருங்கள்.

Nestlé Sunrise FREE! Stainless Steel Tumbler
instant a coffee chicory blend
Refill Pack 200g

இப்பொழுது ஸன்ரைஸ் பளபளப்பான எவர் சில்வர் தம்ளர் ஒன்றைக்கொண்டுவருகிறது. இலவசம்! ஒவ்வொரு 200 கிராம் ரீ:பில் பேக்குடனும்.

அந்த மணம் கமழும் கமகமக்கும் வாசனைக்கும் புதிதாக வடிக்கட்டி வீட்டில் தயாரித்த காபியின் முழுச் சுவைக்கும் ஈடாக ஸன்ரைஸைப் போல் எதுவும் கிடையாது.

இப்பொழுது நீங்கள் அந்த அருஞ்சுவையை, நாளின் எந்த நேரத்திலும் உங்கள் ஸன்ரைஸ் தம்ளரில் ருசித்து மகிழலாம்.

Nestlé®
## ஸன்ரைஸ்
இன்ஸ்டன்ட் காப்பி-சிகரி ப்ளெண்ட்

அந்த முதல் கோப்பையின் புத்துணர்ச்சிக்கு

முந்துங்கள்! அளவான ஸ்டாக்.

FSL-8885 TAM

"உங்கள் ஓட்டு செங்கதிர்ச் செல்வனுக்கே!"

கோரஸாக ஒலித்த குரலில் அருணாசலத்தின் குரல் மட்டும் தனித்துக் கேட்டது. கூலிக்காகவும், கடமைக்காகவும் கூவுபவர்களிடையே, உளமார விரும்பியதை உற்சாகம் பெருகக் கூவுவதாலேயே அவன் குரல் ஒரு தனியான அழுத்தத்துடன் ஒலித்தது.

கட்சித் தொண்டர்களின் சிறிய ஊர்வலத்துக்கு நடுவே மெதுவாக நடந்து வந்து கொண்டிருந்தார் சட்டசபை வேட்பாளர் செங்கதிர்ச் செல்வன். தேர்தல் பிரசாரத்தின் இறுதி நாள் ஆதலால் சுறுசுறுப்பு அதிகமாகவே இருந்தது.

துவங்கியதிலிருந்து எதிர்க் கட்சியாகவே இருந்த மக்கள் தேசியக் கட்சியில் ஒரு முக்கியமான தலைவர் செங்கதிர்ச் செல்வன். முந்தைய இரண்டு தேர்தல்களிலும் நின்று தோற்றவர். என்றாலும் நேர்மையானவர் என்று மக்களிடையே செங்கதிர்ச் செல்வனுக்கு ஒரு நல்ல இமேஜ் இருந்தது. இந்தத் தேர்தலில் ஆளும் கட்சியான சோஷலிச மூச்சுக் கட்சியின் செல்வாக்குச் சற்று சரிந்து காணப்பட்டதால், ம.தே.க. ஆட்சியைப் பிடிக்க வாய்ப்பு இருப்பதாகப் பலராலும் கருதப்பட்டது.

செங்கதிர்ச் செல்வனைப் பொறுத்தவரை அவரது வெற்றி உறுதி செய்யப்பட்டு விட்டதாகத் தோன்றியது. அதற்கு முக்கிய காரணம் இந்தத் தேர்தலில் அவருக்காக உழைத்த கட்சித் தொண்டன் அருணாசலம்தான். தொகுதி முழுவதும் ஒரு கிராமம் விடாமல் சுற்றி விட்டான் அருணாசலம். மக்களை நேரில் சந்தித்துக் கேட்டும், கட்சி அமைப்புகளை ஆங்காங்கே தீவிரமாகப் பிரசாரத்தில் ஈடுபடுத்தியும் செ. செல்வனின் பிரசாரத்தை முன்னின்று நடத்திவந்தான். இத்தனைக்கும் அவன் கட்சியில் எந்தப் பதவியையும் வகிப்பவனல்ல. அந்தத் தொகுதியைச் சேர்ந்த ஒரு சாதாரண உறுப்பினன். அவ்வளவுதான்.




# அரசியல் என்பது...

-விஜயசாரதி

செங்கதிர்ச் செல்வனுக்கே அருணாசலத்தின் அயர வைக்கும் உழைப்பு பிரமிப்பாயிருந்தது. இத்தனைக்கும் இந்தத் தேர்தல் பிரசாரத்தின் போதுதான் இருவருக்கும் பழக்கமே ஏற்பட்டது. அது கூட அருணாசலம் தானே முன்வந்து தீவிரமாக வேலையில் ஈடுபட்ட பிறகுதான்.

ஒருமுறை இருவரும் தனித்திருந்தபோது செங்கதிர்ச் செல்வனே அவனிடம் கேட்டார். "ஏம்பா, எனக்காக இவ்வளவு உழைக்கிறாயே, இதற்கு என்ன காரணம்?"

அருணாசலம் கொஞ்சம் யோசித்துவிட்டு, "ஐயா, நான் படிக்காதவன். என்னால் இவ்வளவுதான் சொல்ல முடியும். ராமருக்காக அனுமார் உழைத்தாரே, எதற்காக?" என்றான்.

"ராமர் மேலே அனுமாருக்கு பக்தி."

"பக்தி என்பது பிறகு. அடிப்படையான காரணம் என்ன? அனுமார் சுக்ரீவனிடம் பணியாற்றுகிறவர்.

சுக்ரீவன் ராமருக்கு உதவி செய்வதாக வாக்களித்தான். அதனால் சுக்ரீவன் பொறுப்புக்காக அவன் ஆளான அனுமார், ராமர் காரியத்தைத் தன் சொந்தக் காரியமாக நினைத்துச் செய்தார். அது போலத்தான் நீங்க கட்சியோட வேட்பாளர். நான் கட்சியோட தொண்டன். உங்களுக்காக உழைக்க வேண்டியது என் கடமை.''

''அடேயப்பா! படிக்காதவன்னு சொல்லிட்டு இவ்வளவு ஆழமாப் பேசறியே! உன் மாதிரி ஒரு தொண்டனை நான் இது வரையில் பார்த்ததில்லே — நீ எனக்குச் செய்திருக்கிற உதவியை நான் ஒரு நாளும் மறக்க மாட்டேன்.'' என்றார் செங்கதிர்ச் செல்வன் நெகிழ்ச்சியுடன்.

தான் கட்சிக்காக உழைப்பதாகவே அருணாசலம் சொன்னாலும், ஒரு மாதப் பழக்கத்துக்குள், அவனும், செங்கதிர்ச் செல்வனும் ராமனும், அனுமனுமாகவே ஆகிவிட்டார்கள்.

தேர்தல் முடிந்து ஓட்டுகள் எண்ணும் நாள். ஓட்டு எண்ணப்படும் பள்ளிக்கு வெளியே மக்கள் திரளாகக் கூட ஆரம்பித்தார்கள். இவ்வளவு தூரம் நேரிடையாக உழைத்தும் அருணாசலம் வேட்பாளர் ஏஜெண்ட்டாக உள்ளே உட்காரவில்லை. செங்கதிர்ச் செல்வனின் வெற்றி உறுதி என்றாகிவிட்டதில் வெற்றி விழாவுக்கான ஏற்பாடுகளைக் கவனிக்கத் துவங்கியிருந்தான்.

கிட்டத்தட்ட ஒரு மாதம் சரியான தூக்கமின்றி உழைத்ததால் சோர்வு மிகுதியாகத் தோன்றச் சற்று நேரம் தூங்கலாம் என்று தன் வீட்டை நோக்கித் தனியாக அவன் நடந்துகொண்டிருந்தபோதுதான் அது நிகழ்ந்தது.

செங்கதிர்ச் செல்வனுக்காக அருணாசலம் கடுமையாக உழைத்ததைக் கண்டு கொதிப்படைந்திருந்த மாற்றுக் கட்சிக்காரன் ஒருவன், அருணாசலம் தனியாக வருவதைக் கண்டதும் தன் ஆத்திரத்தைத் தீர்த்துக் கொள்ள விழைந்து ஒரு சோடா பாட்டிலை அருணாசலத்தை நோக்கி வீசிவிட்டு ஓடிவிட்டான்.

சோடா பாட்டில் அருணாசலத்தின் நெற்றியில் தாக்கி ரத்தம் பெருக அவன் மயங்கி விழுந்து விட்டான்.

கண் விழித்த போது அவன் ஒரு ஆஸ்பத்திரிக் கட்டிலில் படுத்திருந்தான். பக்கத்தில் துணையாக யாரோ ஒரு கட்சித் தொண்டன் அமர்ந்திருந்தான்.

சற்றுத் தெளிவு ஏற்பட்டதும் அவன் கேட்ட முதல் கேள்வி இதுதான். ''நம்ம தலைவர் ஜெயிச்சுட்டாரா?

கட்சித்தோழன் மௌனமாகத் தலையசைத்தான்.

அருணாசலத்துக்கு மகிழ்ச்சி பீறிட்டு வந்தது. ''எவ்வளவு ஓட்டு வித்தியாசம்?''

''பதினைஞ்சாயிரம்.''

''அடே அப்பாடா! நாம எதிர்பார்த்ததை விட அதிகம்தான். அது சரி... நம்ம கட்சிக்கு எவ்வளவு சீட் கெடச்சுது? மெஜாரிட்டி கெடச்சுதா?''

''அதெல்லாம் அப்புறம் பேசிக்கலாம். நீ ஓய்வெடுக்கணும்னு டாக்டர் சொல்லியிருக்கார்'' என்று முடித்துவிட்டான் தோழன்.

செங்கதிர்ச் செல்வன் வந்தார். ''இது என் வெற்றி இல்லை அருணாசலம்; உன் வெற்றி! அடுத்த தடவை நான் நிக்கப் போறதில்லை; நீதான் நிக்கணும். இந்தத் தொகுதியிலே நான் உனக்கு உழைக்கப் போறேன்...''

''அட என்னங்க இது? நீங்க பெரிய தலைவரு. நீங்க எங்கே...? நான் எங்கே?'' என்றான் அருணாசலம் கூச்சத்துடன். ''அது சரிங்க... மெஜாரிட்டி யாருக்குக் கிடைச்சது?''

''நமக்குத்தான் மெஜாரிட்டி. நான் மந்திரி ஆகிறேன் அருணாசலம். இந்த மந்திரி பதவி கூட நீ போட்ட பிச்சைதான். இதை பப்ளிக்கா மீட்டிங்கிலேயே சொல்லப் போறேன்...''

எவ்வளவு நன்றி பாராட்டுகிறார் என்று வியந்தான் அருணாசலம். அதற்குப் பிறகு அவன் இருந்த இரண்டு நாட்களும் துணையிருந்த கட்சித் தோழன் அரசியல் பற்றிய கேள்விகளுக்குச் சரியாகப் பதில் சொல்லவில்லை: செங்கதிர்ச் செல்வன் தினம் ஒரு முறை வந்து போனார். முதல்வர் யார் என்பது இன்னும் முடிவாகவில்லையாம்.

மூன்று நாட்கள் கழித்து அவன் டிஸ்சார்ஜ் ஆன போது, செங்கதிர்ச் செல்வன் அவனை நேரே தன் வீட்டிற்கு அழைத்துச் சென்றார். வரவேற்பறையில் அவனை உட்கார வைத்து விட்டு அவர் உள்ளே போன போது பத்திரிகைகளைப் புரட்டிப் பார்த்த அருணாசலத்துக்கு அதிர்ச்சி.

தமது கட்சியிலிருந்து விலகி சோஷலிச மூச்சுக் கட்சியில் செங்கதிர்ச் செல்வன் சேர்ந்து விட்டிருந்தது தெரிந்தது. அவன் கட்சியான மக்கள் தேசியக் கட்சி எதிர்பார்த்த அளவு வெற்றி பெறவில்லை. ஆளும் கட்சியாயிருந்த சோ. மு. க. பலம் குறைந்து போனாலும் மெஜாரிட்டி பெற்று விட்டது.

---

**எம்.எல்.ஏ.: ''என்னோட தொகுதியில் இரண்டு தொழிற்சாலைகளை நான் ஏற்படுத்திக் கொடுத்தும் தொகுதி மக்களுக்கு என்னிடம் அதிருப்தி நிலவுது!''**

**ஒருவர்: ''ஏன்....?''**

**எம்.எல்.ஏ.: ''இரண்டு தொழிற்சாலைகளுமே என்னோட பெயரில் இருக்காம்!''**

— சுடுவை கோபால்சாமி.



# அருள் வாக்கு



**வே**தமிருந்தால்தான் லோகம் நன்றாக இருக்கும்; ஆத்மாவும் க்ஷேமமடையும் என்பது என் அபிப்ராயம். இந்தப் பெரிய மூலதனம் இப்போது வீணாகப் போயிருக்கிற நிலை மாறி, இதை மறுபடி தழைக்கும்படியாகப் பண்ண வேண்டுமென்பதே எனக்கு ஸதா விசாரமாக இருக்கிறது. அதற்காகத்தான் என்னாலானதை ஏதோ திட்டம் கிட்டம் போட்டு, வேத ரக்ஷணம், ஸ்டைபெண்ட் என்று பல இடங்களில் ஏற்பாடு செய்திருக்கிறது. ஆனால் இது, இந்த மடம், அல்லது சில ஸ்தாபனங்களின் கடமை மட்டுமல்ல; இது நம் எல்லோர் கடமையுமாகும். உங்கள் எல்லோருடைய ட்யூட்டியும் ஆகும். நிர்ப்பந்தத்துக்காக இல்லாமல், ஆசையோடு, ஆர்வத்தோடு நீங்கள் எல்லாரும் சேர்ந்து இது வேத பூமி என்பதை மறுபடி நிஜமாக்கப் பிரயாசைப் படவேண்டும். தமிழ் நாட்டுக்கு இதை நான் முக்யமாகச் சொல்கிறேன்.

வேத விருக்ஷம் நன்றாக விழுது விட்டு வளர்ந்த மண் இந்தத் தமிழ் பூமி. 'வேதம் நிறைந்த தமிழ் நாடு' என்று (பாரதி) பாடியிருப்பது கவியின் அதிசயோக்தி இல்லை. அப்படித்தான் தமிழ் தேசம் இருந்திருக்கிறது.

சங்க காலத்திலிருந்து எங்கே பார்த்தாலும் வேத வேள்விகளை வானளாவப் புகழ்ந்து சொல்லியிருக்கிறது. சங்கம் வளர்த்த பாண்டிய ராஜாக்கள் வைதிகமான யக்ஞாதிகளை நிறையச் செய்து, 'பல் யாக சாலை முதுகுடுமிப் பெரு வழுதி' என்ற மாதிரியான பட்டங்களைத் தங்களுக்குப் பெருமையோடு சூட்டிக் கொண்டிருக்கிறார்கள்.

**—ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

---

அப்படியானால்... தங்கள் கட்சிக்கு மெஜாரிட்டி கிடைத்துவிட்டதாகச் செ. செல்வன் சொன்னது... ஓ! தனது புதிய கட்சியைக் குறிப்பிட்டிருக்கிறார். கட்சித் தோழன் மௌனம் சாதித்தது ஏன் என்றும் இப்போது புரிந்தது.

அருணாசலத்துக்குச் சுர்ரென்று கோபம் வந்தது. அடப்பாவி! இதற்காகவா இவ்வளவு தூரம் இவருக்காக உழைத்தேன்!

செங்கதிர்ச் செல்வன் உள்ளிருந்து வந்தார்.

அருணாசலம் பதற்றத்துடன், "ஐயா...!" என்று ஆரம்பித்தான்.

"பொறு அருணாசலம்... ஆமாம். நான் கட்சி மாறிவிட்டது உண்மைதான். அதனால் என்ன இப்போ? எந்தக் கட்சியில் இருந்தாலும் மக்களுக்குச் சேவை செய்யணும். அதுதான் முக்கியம். நம்ப பழைய கட்சி இனிமே ஒருநாளும் பதவிக்கு வரப் போறதில்லை. அதனாலதான் பதவிலே இருக்கிற கட்சியிலே சேர்ந்து நம்மாலான சேவையை நாட்டுக்குச் செய்யலாம்னுதான் சேர்ந்தேன். அதுல என்ன தப்பு?"

"ஐயா... இது என்னங்க... இப்படிப் பேசினா என்ன அர்த்தம்? இப்படிப் பார்த்தா எதிர்க்கட்சிங்கறது எதுக்கு? எந்தக் கட்சி ஜெயிக்குதோ அதுலியே எல்லாரும் போய்ச் சேர்ந்துடலாமே!"

"இங்க பாருப்பா... அதெல்லாம் அவங்கவங்க இஷ்டம். ஒன்னோட விவாதிக்க எனக்கு நேரமில்லை... நீயும் என்னோட வந்துரு. ஒனக்கு ஏதாவது பதவி வாங்கித் தரேன். இல்லேன்னா ஏதாவது காண்டிராக்ட் வாங்கித் தரேன்..."

"எதுக்கு? காண்டிராக்ட் எடுத்து மக்களுக்குச் சேவை செய்யவா?" அருணாசலம் எழுந்துவிட்டான். "நான் வரேன்யா! ரொம்ப சுலபமா முட்டாளாக்கிட்டீங்க என்னையெல்லாம்..."

"இங்க பாரு அருணாசலம், நான் சொல்றதை..."

அவன் போய் விட்டான்.

**ம**றுநாள் செங்கதிர்ச் செல்வன் ஊழல் ஒழிப்புத் துறை அமைச்சராகப் பதவி ஏற்றார்.

செங்கதிர்ச் செல்வனின் கட்சி மாற்றத்தால் சீற்றமடைந்த மக்கள் தேசியக் கட்சி அவரை ராஜினாமா செய்யக்கோரிப் போராட்டம் நடத்தத் தீர்மானித்தது.

நூறு தொண்டர்கள் அமைச்சர் வீட்டின் முன்னால் அமர்ந்து அமைதியாகச் சத்தியாக்கிரகம் செய்தனர். கட்சி மாறிய செங்கதிர்ச் செல்வன் எம். எல். ஏ. பதவியை ராஜினாமாச் செய்ய வேண்டும் என்ற கோரிக்கை அட்டைகள் மூலமும், கோஷங்கள் மூலமும் வந்தது. அமைச்சர் உள்ளேயே இருந்தார்.

திடீரென்று அமைச்சர் வீட்டின் காம்பவுண்டுக்கு வெளியிலிருந்து செங்கற்களும், சோடா புட்டிகளும் பறந்து வர தொண்டர்கள் அடிபட்டுக் கொண்டு அலறி வெளியே ஓடினர். அருணாசலத்துக்கு இந்த முறை தோளில் பலமான செங்கல் அடி. அவனும், பலமாகக் காயமடைந்த மற்றவர்களும் ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டனர்.

அருணாசலம் தலைமையில் வந்த எதிர்க்கட்சிக் குண்டர்கள் அமைச்சர் இல்லத்திலிருந்த ஆளும் கட்சித் தொண்டர்களைத் தாக்கியதாகவும் அதனால் கைகலப்பு ஏற்பட்டதாகவும் அமைச்சர் கொடுத்த புகாரின் பேரில் அருணாசலம் கைது செய்யப்பட்டான்.

# சித்தரஞ்சனி

சாண்டில்யன்



## 17. காஷ்டானனுக்குப் புதிய பதவி!

திருமணத்திற்கு மணமகள் தேவையென்றும் அவளைக் காணவில்லையென்றும் கூறிவிட்டு, நாகபாணன் நகைத்ததைக் கண்ட க்ஷத்ரபனும், காஷ்டானனும் அந்த நகைப்பை ரசிக்க முடியாததாலும், நாகபாணனை எதிர்த்து ஏதும் பேசும் துணிவில்லாததாலும் அதிர்ச்சியுற்று ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டு பல விநாடிகள் நின்றுவிட்டாலும், காஷ்டானன் மட்டும் சிறிது தைரியத்தை வரவழைத்துக் கொண்டு, "அவள் எப்படிக் காணாமல் போனாள்? அவளைத் தப்பவிட்டது யார்?" என்று வினவினான் சிறிது சினத்தையும் ஏமாற்றத்தையும் குரலில் காட்டி.

மாப்பிள்ளையின் தைரியத்தை க்ஷத்ரபனும் வரவழைத்துக் கொண்டு, "அவள் தப்புவதற்கு யார் காரணம் என்பதைக் கண்டு பிடிக்க வேண்டும்" என்று கூறினான்.

"கண்டு பிடித்துத் தகுந்தபடி தண்டிக்கவும் வேண்டும்" என்றான் காஷ்டானன்.

நாகபாணன் இதழ்களில் வெறுப்பும் இகழ்ச்சியும் கலந்த புன்னகை தாண்டவமாடியது. "தண்டனை என்ன-என்பதை நீங்களே தீர்மானித்துவிடலாம்" என்றான் நாகபாணன் சொற்களிலும் நகைச்சுவை ஒலிக்க.

"சிறையில் போட்டுச் சித்திரவதை செய்யலாம்" என்று க்ஷத்ரபன் தண்டனையைக் குறிப்பிட்டான்.

நாகபாணன் அப்பொழுதும் சிறிதும் மசியாமல் சர்வ சாதாரணமாகச் சொன்னான், "அப்படியானால் நீங்கள் இருவரும் இப்பொழுதே சிறைக்குப் போகலாம். சித்திரவதைக்கு நான் ஏற்பாடு செய்கிறேன்" என்று.

காஷ்டானன் முகத்திலும் க்ஷத்ரபன் முகத்திலும் திகில் மிக அதிகமாகப் பரவியதால், க்ஷத்ரபன் பேசாவிட்டாலும், "நாங்களா?" என்று கேட்டான் காஷ்டானன்.

"நாங்கள் சிறைக்குப் போக வேண்டிய காரணம்?" என்று க்ஷத்ரபனும் குரலில் திகிலைக் காட்டினான்.

நாகபாணன் தனது ஆசனத்திலிருந்து மெதுவாக எழுந்து நின்று கொண்டு அவர்கள் இருவரையும் வெறுப்புடன் நோக்கி விட்டு, "என்னுடைய கட்டளைகளை நீங்கள் ஒழுங்காக நிறைவேற்றியிருந்தால் இத்தனை நேரம் சாதவாகனன் நமது மரக்கலத்தில் அபராந்தாவை நோக்கிச் சென்று கொண்டிருப்பான். இன்னும் இரண்டு நாட்களில் நமது சிறைச் சாலையில் கட்டுண்டு கிடப்பான். இங்கு நாம் நிம்மதியாக நமது திட்டத்தை நிறைவேற்றிக் கொண்டிருக்கலாம். சித்தரஞ்சனிக்கும் திருமணத்தை முடித்திருப்பேன். ஆனால்...." என்று சிறிது பேச்சை நிறுத்திய நாகபாணன் க்ஷத்ரபன் மீது தனது கண்களை நாட்டி, "சாதவாகனனுக்குப் பதில் இந்த முட்டாளைக் கட்டிக் கொண்டு வந்தாய் மரக்கலத்துக்கு. மரக்கலத்தை அடைந்த பின் பாவது மூட்டையை அவிழ்த்துப் பார்த்தாயா? அதுவும் இல்லை. மூட்டையிலிருந்தது சாதவாகனன் என்று நம்பிச் சித்தரஞ்சனி சுதந்திரமாக உலாவ அனுமதித்தேன். இத்தனை விவகாரத்துக்கும் எனது திட்டங்கள் உடைந்ததற்கும் சித்தரஞ்சனி காணாமற் போனதற்கும் நீதான் முதல் காரணம்" என்று சீறினான். அடுத்துக் காஷ்டானனை நோக்கி, "சித்தரஞ்சனி காணாமற் போனதற்கு நீயும் காரணம். உன்னை யார் மரத்தடியில் நின்று மண்டையில் அடி வாங்கிக் கொள்ளச் சொன்னது?" என்று அவனையும் காரணமில்லாமல் தூற்றி விட்டு, "இன்று மாலைக்குள் சித்தரஞ்சனியைப் பிடித்து வாருங்கள். இல்லாவிட்டால் நீங்கள் குறிப்பிட்ட சிறைத் தண்டனையும், சித்திரவதையும் உங்களுக்கு நிச்சயமாகக் கிடைக்கும்" என்று மிரட்டவும் செய்தான்.

நாகபாணன் கோபத்தைச் சிறிது குறைக்க, "கவலைப்பட வேண்டாம் பிரபு! சித்தரஞ்சனியை நானே பிடித்து வருகிறேன்!" என்று காஷ்டானன் கூறினான்.

"சாதவாகனனை நான் பிடித்து வருகிறேன். அவனைச் சிறைச்சாலையில் தள்ளி நானே சித்திரவதை செய்கிறேன்" என்று கூறினான் க்ஷத்ரபன்.

அவர்கள் சபதத்திலோ திறமையிலோ சிறிதும் நம்பிக்கையில்லாத நாகபாணன், "இவர்களைப் போல் நூறு பேர் இருப்பதற்குப் பதில் கௌதமிபுத்ரன் ஒருவன் என்னிடமிருந்தால் எனது சாம்ராஜ்யத்தை மகராஷ்டிரத்தில் நிலைக்கச் செய்ய அதிக காலம் பிடிக்காது" என்று எண்ணிப் பெருமூச்சு விட்டான். அவர்களைவிட இது விஷயத்தில்

தானே நேரிடையான முயற்சி எடுக்க வேண்டிய அவசியத்தையும் புரிந்து கொண்டதால் அதற்கான ஏற்பாடுகளைச் செய்யவும் தீர்மானித்து, தனது மரக்கல மாலுமிகள் இருவரைக் கோட்டைக்கு வரும்படி செய்தியனுப்பினான்.

இதற்கிடையில் சித்தரஞ்சனியை எப்படியாவது பிடித்து வரும் நோக்கத்துடன் கோட்டையிலிருந்து நாலைந்து வீரர்களுடன் படகில் புறப்பட்ட காஷ்டானனும், க்ஷத்ரபனும் வாசிஷ்டியின் சங்கமத் துறையில் வந்து இறங்கினார்கள். காஷ்டானனையும் இரு வீரர்களையும் தாபோல் மலையின் வடக்குப் பகுதியில் ஏறவிட்டு, தான் மட்டும் மற்ற மூன்று வீரர்களைத் துணை கொண்டு தென்பகுதியில் ஏறினான். அப்படி இருபுறத்திலும் இரு பிரிவுகளாக ஏறினால் ஒருபுறம் தாபிலேசுவரர் கோவிலும், இன்னொரு புறத்தில் சண்டிகையின் குகையும் இருந்ததால் அவர்கள் இரண்டு இடங்களில் எங்கிருந்தாலும் பிடித்துவிடலாம் என்ற நிச்சயத்துடன் திட்டமிட்ட க்ஷத்ரபன் தென்பகுதியிலிருந்த தாபிலேசுவரர் கோவிலை நோக்கிச் சென்றான்.

அன்று காலை மலையின் சூழ்நிலை மிக ரம்யமாயிருந்தது. நன்றாகச் சூழ்ந்து கிடந்த பனிக்கூட்டம் ஆங்காங்கு மலையுச்சிப் பாறைகளில் தொக்கி சூரிய கிரணங்களை லேசாகத்தடுத்து அனுப்பியதால் அங்கங்கு சின்னஞ்சிறு வான விற்கள் தோன்றி மலைக் காட்டு வண்ணமலர்களுடன் போட்டி போட்டன. எதிரே வருபவர்கூடத் தெரியாத அளவுக்குப் பனி சூழ்ந்து கிடந்ததால் மிகுந்த எச்சரிக்கையுடன் மலையின் தென்பகுதியில் ஏறிச் சென்ற க்ஷத்ரபன் தாபிலேசுவரர் கோயிலை அடைந்தபோது உள்ளே சுவாமிக்கு அபிஷேகம் நடந்து கொண்டிருந்தது. பூஜாரி தீபாராதனை காட்டியபோது பக்கத்திலிருந்த ஒருவர் அடித்த மணியோசை பெரிதாக ஒலித்துக் காட்டுப் பகுதி முழுவதையுமே ஊடுருவிச் சென்றதைக் கண்ட க்ஷத்ரபன் பூஜாரியைப் பிடித்தால் சாதவாகனன் அகப்பட்டுவிடுவான் என்று நினைத்து, பூஜை முடியட்டுமென்று காத்திருந்தான் கோவில் வாயிலுக்கு வெளியே. தன்னுடன் வந்த வீரர்களையும் வாயில் பக்கத்திலிருந்த கருங்கல் பிராகாரத்தில் உட்கார வைத்து பூஜாரி வந்ததும் அவரைப் பிடிக்கச் சித்தமாயிருக்கும்படி உத்தரவிட அவர்களும் வாயிற்படிக்கு இரு பக்கத்திலும் உட்கார்ந்து பூஜாரி வெளியே வரும் சமயத்தை எதிர்நோக்கிக் கொண்டிருந்தார்கள்.

பூஜாரி அன்றைக்கென்று நீண்ட நேரம் அர்ச்சனை செய்து கொண்டே இருந்ததால் கொஞ்ச நேரத்தில் வெளியே வருவதாகக் காணோம். இதனால் பொறுமை இழந்த க்ஷத்ரபன் ''யாரையா பூஜாரி! சீக்கிரம் வெளியே வா'' என்று அதிகாரக் கூச்சலிட்டான்.

உள்ளே மந்திரங்களைப் பெரிதாக உச்சாடனம் செய்த வண்ணம் அர்ச்சனையைப் பலமாகச் செய்து கொண்டிருந்த பூஜாரி அந்தக் கூச்சலைச் சிறிதும் லக்ஷியம் செய்தவராகத் தெரியவில்லை. மீண்டும் ஒருமுறை க்ஷத்ரபன் கூச்சலிடத் துவங்குமுன் பெரிய வெண்கல மணியுடன் வெளியே வந்த ஒரு மனிதன், ''அர்ச்சனை நடக்கும்போது கூச்சலிடாதே'' என்று எச்சரித்தான். அப்படி அவன் சொல்லிக் கொண்டே அந்தப் பெரிய மணியைத் தூக்கிப் பிடித்த விதத்திலிருந்து, மீண்டும் கூச்சலிட்டால் அந்த மணி தனது தலையில் மோதி விடும் என்பதை உணர்ந்த க்ஷத்ரபன், ''பூஜாரியுடன் அவசரமாகப் பேச வேண்டும்'' என்று சிறிது குரலைத் தாழ்த்திக் கூறினான்.

''கொஞ்சம் பொறு. முடிவாக மங்கள ஆரத்தி எடுத்ததும் அவரே வெளியே வருவார். அப்பொழுது பேசலாம்'' என்றான் அந்த மனிதன்.

''பொறுப்பதற்கில்லை'' என்றான் க்ஷத்ரபன்.

''அப்படியானால் மாலையில் வா'' என்றான் அந்த மனிதன்.

அவனை முன்பின் பார்த்திராததால் யாரோ புது மனிதன் வந்திருப்பதாக நினைத்த க்ஷத்ரபன், ''நீ இந்த மலைக்குப் புதிதா?'' என்று வினவினான்.

''உன்னைப் பார்த்தால்தான் புதிதாக இருக்

---

துப்பாக்கி சுடும் பயிற்சியில் தம் வீரர்கள் முறையாக முன்னேறவில்லை என்று கருதியது பாதுகாப்புத் துறை. பெண்களுக்கான ஒரு பத்திரிகையில் வெளியான மிகப் பெரிய பெண் உருவம் அச்சான 'ப்ளோ—அப்' புகைக் குறியாக வைத்து, அதைப் பார்த்துச் சுடும்படி பயிற்சி தந்தார்கள். வீரர்கள் உற்சாகமான முன்னேற்றம் காண்பிக்க முயன்றபோது பெண்ணுரிமை இயக்கத்தினர் இடையில் புகுந்து பாதுகாப்புத் துறை பெண்களை அவமதிப்பதாகக் கோர்ட்டில் வழக்குத் தொடுத்தனர். இப்போது பாதுகாப்புத் துறை நீதிமன்றத்தில் நிற்கிறது. இடம்: ஸ்வீடன். அங்கே பல நூறு ஆண்டுகளாகப் பெண்களுக்கு உரிமைகள் மறுக்கப்பட்டு வந்ததும் சில வருடங்களுக்கு முன்புதான் வாக்குரிமை அளிக்கப்பட்டது என்பதும் குறிப்பிடத் தக்கது.



—உமன்ஸ் ஓன். —ராமு.

கிறது'' என்றான் அந்த மனிதன்.

"இதற்கு முன் நான் உன்னைப் பார்த்த தில்லை'' என்றான் க்ஷத்ரபன்.

"நீ பார்க்காத மனிதர்களெல்லாம் இந்த ஊருக்குப் புதிதா?'' என்று இகழ்ச்சியுடன் கேட்டான் அந்த மனிதன்.

அவன் காட்டிய அலட்சியத்தையும் பேச்சிலிருந்த தாஷ்டீகத்தையும் கவனித்த க்ஷத்ரபன் சற்றுச் சிந்தனையில் இறங்கி, "பூஜாரி வயோதிகராயிற்றே என்று பார்க்கிறேன். இல்லாவிட்டால் உன்னையும் அவரையும் கை கால்களைக் கட்டித் தூக்கிக் கொண்டு போய் விடுவேன்'' என்று சீறினான்.

சீற்றம் மிகுந்த அவன் சொற்களைக் கேட்ட அந்தப் புது மனிதன் பெரிதாக நகைத்தான். "பூஜாரி வயோதிகரா, என்னய்யா உளறுகிறாய்? இந்தக் கோவில் பூஜாரியை நீ பார்த்ததில்லையா?'' என்று வினவினான் நகைப்பின் ஊடே.

"பூஜாரி வயோதிகரில்லையா?'' என்று க்ஷத்ரபன் கேட்டான்.

"இல்லை.''

"சிறு பிள்ளையோ?''

"இல்லை.''

"எதற்கும் இல்லை இல்லை என்று என்னய்யா பதில்?

"வாலிபர்'' என்ற அந்தப் புது மனிதன், "இன்றைக்கு பூஜாரி சகஸ்ரநாமார்ச்சனை செய்கிறார். ஆகையால் நேரமாகும். விசேஷ பூஜை'' என்றான்.

"இன்றைக்கு என்ன விசேஷம்?''

"விவாஹம்.''

"யாருக்கு?''

"பூஜாரிக்குத்தான்.''

"அவர் விவாகத்திற்கு அவரே பூஜை செய்கிறாரா?''

"ஆம்.''

"இதென்னய்யா விசித்திரம்?'' என்ற க்ஷத்ரபன் சட்டென்று மூச்சை இறுக்கப் பிடித்துக் கொண்டான். உள்ளிருந்த பூசாரி மங்கல ஆரத்தியை ஏந்தி வந்து எல்லோருக்கும் காட்டினார். எல்லோரும் கண்களில் தீபத்தை ஒத்திக் கொண்டதும், விபூதிப் பிரசாதமும் கொடுத்தார். க்ஷத்ரபனைப் பார்த்ததும் புன்முறுவல் செய்து, "வர வேண்டும்'' என்று முகமன் கூறினார்.

க்ஷத்ரபன் வாயைத் திறக்கவில்லை. விவரிக்க இயலாத வியப்பினாலும் பிரமையாலும் பூஜாரி மீது வைத்த கண்ணை வாங்கவில்லை. நல்ல பட்டுகளிரண்டை இடுப்பிலும், மார்பிலும் அணிந்து, பட்டை பட்டையாக விபூதியை உடல் முழுவதும் தீட்டிக் கொண்டு, விபூதிப் பிரசாதம் கொடுத்த கௌதமிபுத்ரனை நோக்கி, "கௌதமிபுத்ரா! இதென்ன புது வேடம். உனக்குத் திருமணமென்றால் பெண் யார்?'' என்று வினவினான்.

"வேறு யார்? தங்கள் வளர்ப்புச் செல்வி தான்'' என்ற கௌதமிபுத்ரன் விபூதியை வாயிற்படியின் இருபுறங்களிலும் நின்றிருந்த வீரர்களுக்கும் கொடுத்தான். விபூதியை வாங்கிக் கொண்ட வீரர்கள் விழித்தார்கள் என்ன செய்வதென்று அறியாமல்.

கௌதமிபுத்ரன் வாயிற்படிக்கு அருகில் நின்ற புது மனிதனை நோக்கி, "சேனாதிபதி! உள்ள நிலையை இவருக்கு விளக்கி அனுப்பி விடு'' என்று உத்தரவிட்டான். அவன் உத்தரவிட்டு உள்ளே திரும்புவதற்குள் சற்றுத் தூரத்தில் பேரரவம் கேட்கவே கௌதமிபுத்ரன் நின்ற இடத்திலேயே நின்றான். சுமார் நாலைந்து மலைவாசிகள் காஷ்டானனைப் பலவந்தமாக இழுத்துவந்தார்கள். அவர்களில் ஒருவன் சொன்னான், "இவர் சண்டிகை குகையில் நாலைந்து வீரருடன் நுழைய முற்பட்டார். அங்கு ஹோமம் நடக்கிறதென்று சொன்னோம், கேட்கவில்லை. பலவந்தமாக இழுத்து வந்தோம்'' என்று.

காஷ்டானனுக்கிருந்த எரிச்சலில், "டேய் பூஜாரி! நாளைக்கு நீ பூஜை செய்வதை நான் பார்த்துவிடுகிறேன்'' என்று கூச்சலிட்டவன் சற்று நிதானித்து பூஜாரி அருகில் வந்து, "சாதவாகனா! நீயா பூஜாரி! இதென்ன வேஷம்?'' என்று கேட்டான்.

"பூஜை செய்வது வேஷமா?'' என்று கேட்டான் சதகர்ணி.

"உண்மையான பக்தி மனத்திலிருந்தால் போதாதா? உடம்பு முழுவதும் விபூதி பூச வேண்டுமா?'' என்று வினவினான் காஷ்டானன்.

கௌதமிபுத்ரன் புன்முறுவல் செய்தான், "சில வியாதிகளுக்கு உள்ளுக்கு மருந்து கொடுத்தால் போதும். சில வியாதிகளுக்கு உள்ளுக்கும் மருந்து கொடுத்து வெளியிலும் தைலம் பூச வேண்டும். அப்படித்தான் பக்தியும். அவரவர் பக்குவத்தைப் பொறுத்தது'' என்றான் புன்முறுவலின் ஊடே.

அதற்குப் பிறகு கௌதமிபுத்ரன் பேச்சை வளர்க்காமல், "காஷ்டானா! இன்று இரவு பூஜை முடிந்த பிறகு எனக்குத் திருமணம். அதில் உனக்கும் பங்கு உண்டு'' என்றான்.

"எனக்கு என்ன பங்கு?''

"மாப்பிள்ளைத் தோழன். இதுவரையில் நீ கண்டிராத அளவுக்கு உனக்கு மரியாதை செய்கிறேன்.''

"எனக்கு மரியாதையும் வேண்டாம். மண்ணாங்கட்டியும் வேண்டாம்.''

"உன்னிஷ்டம்'' என்று சொல்லி உள்ளே செல்ல முயன்ற சாதவாகனனை 'நில்!' என்று கூச்சலிட்டு நிறுத்தி, "சித்தரஞ்சனி எங்கே?'' என்று வினவினான் காஷ்டானன் கோபத்துடன்.

மணியுடன் நின்றிருந்த சேனாதிபதி சொன்னான், "சாதவாகன மகாராணியாகப்போகிறவரை பெயர் சொல்லி அழைப்பது பெருங்குற்றம்'' என்று.

"அவள் என் மனைவி'' என்று கூவினான் காஷ்டானன்.

அடுத்து அவன் கூவவில்லை. சேனாதிபதியின் கையிலிருந்த மணி காஷ்டானன் தலை மீது இறங்கிவிட்டது. அந்தச் சமயத்தில் பெண்கள் பலர் புடைசூழ சர்வாலங்கார பூஷிதையாகச் சித்தரஞ்சனி அங்கு வந்து கொண்டிருந்தாள்.

(தொடரும்)

# தேநீரும் விருந்தோம்பலும் ஸாகர் ஸ்கிம் மில்க்கும்

உங்கள் இல்லத்திற்கு வருகை தரும் நண்பருக்கு முதலில் வழங்குவது எது ? நல்வரவு என்று சொல்லும் புன்னகையும் நல்லதொரு கோப்பை தேநீரும் தானே ! அது வழி வழியாய் வரும் உங்களுடைய கலாசாரத்தின் பிரதிபலிப்பு.

இம்மாதிரி சமயங்களில் பால்பாட்டில் காலியான பரிதவிக்கும் நிலையில் நீங்கள் இருந்தால் ? உடன் புதிய பால் கிட்டாத நிலையானுலோ ?

ஸாகர் ஸ்கிம் மில்க் பவுடர் உங்கள் பாரம்பரிய விருந்தோம்பலை நீங்கள் பேண உதவுகிறது. சிக்கனமாக, விரைவாக, எளிதாக. இனிப்புகளுக்கும் புட்டிங்குகளுக்கும் இது ஈடு இணையற்றது.




ASP/SMP/6/84R

# ஸாகர்

## ஸ்கிம் மில்க் பவுடர்

**கொழுப்பு இல்லாத பாலின் உன்னதமான குணங்கள் உண்டே இதில்.**



விற்பனைக்கு விடுப்போர்:
குஜராத் கோ-ஆப்பரேடிவ் மில்க் மார்க்கெட்டிங் பெடரேஷன் லிமிடெட், தபால் பெட்டி எண் 10, ஆனந்த் 388 001, குஜராத்.

அண்ணாசாலைக்கு வந்தால் அது ஒரு வழக்கம். உடுப்பியில் ரவா இட்டிலி சாப்பிட்டாகவேண்டும். தவறினால் தலை வெடித்துவிடும். ஆனால் இன்று?

மாதக் கடைசி என்பதால், ஒரே ஒரு 'மொட்டை' காப்பிதான்.

வந்து கொண்டிருந்தேன்.

வழியில் பாஸ்கர் — என் ஆபீஸ் சிநேகிதன். ஒரு பெரிய பார்சலைத் தூக்க மாட்டாமல் சுமந்து வந்தான்.

''என்னப்பா இது, அதிசயம். மாதக் கடைசியும் அதுவுமாக ஏது உனக்கு இம்மாம் பெரிய பார்சல். புதையல் ஏதாவது கிடைத்ததா?'' என்று பார்சலை விடப் பெரிதாக விழித்தேன், நான்.

''அதெல்லாம் ஒன்றும் இல்லை, சுந்தரம்'' என்று அசடு வழிந்தான், அவன்.

''பின்னே?''

''போன வாரம் என் மச்சினன் சவூதியிலிருந்து வந்தான், பார். காண்டிராக்ட் முடிந்து திடுதிப்பாகக் கிளம்பி இருக்கிறான். அதனால் எனக்கு டிரஸ் ஏதும் அங்கே வாங்க முடியவில்லையாம். 'இங்கேயே வாங்கிக் கொள்ளுங்கள் அத்திம்பேரே' என்று பணம் கொடுத்தான். அதிலேதான் பாண்ட், சட்டைக்குத் துணி எடுத்து வருகிறேனாக்கும்'' பாஸ்கரின் சிரிப்பில் பெருமை வழிந்தது.

''ஹூம்...'' பெருமூச்சு விட்டேன், நான். வெடிக்காத பட்டாசு மாதிரி பிசுபிசுத்தது, மனம்.

எனக்கும்தான் ஒரு மைத்துனன் இருக்கிறான். பைசாவுக்குப் பிரயோஜனம் உண்டா? பொழுதா பொழுதுக்கும் என் தலையைத்தான் உருட்டுவான்.

வெறுப்பும் வேதனையுமாக வீட்டுக்கு வந்தேன்.

வாசலில் காத்திருந்த மாலதி, ''சுரேஷ் வந்தான்'' என்று தகவல் தந்தாள்.

என் ஆத்திரம் இரட்டிப்பாயிற்று.

சுரேஷ், அவளது தம்பி. அதாவது என் வயிற்றெரிச்சலைக் கொட்டி வந்த மச்சினன்.

''ம்... ம்...'' என்றேன், அசுவாரசியமாய்.

''திருச்சியிலிருந்து அவனுக்கு இண்டர்வியூ வந்திருக்கிறதாம். இரண்டு தினங்கள் அங்கே தங்க வேண்டி வரும்; நூறு ரூபாய் தேவைப்படும்; 'மாதக் கடைசி, அப்பாவிடம் இல்லை' என்று என்னைக் கேட்டான். 'நீங்கள் வந்ததும் கேட்கிறேன்' என்று சொல்லி அனுப்பி இருக்கிறேன்.''

''எனக்கு மட்டும் மாதக் கடைசி இல்லையா?'' என்றேன் — பல்லைக் கடித்துக் கொண்டு.

''நமக்கும் சிரமம்தான். இருந்தாலும்..''

''புரியுது...'' ஒரே வார்த்தையில் 'கட்' பண்ணிக் கொண்டேன்.

ரவா இட்டிலிக்கே கடன் வாங்கவில்லை. இந்த ராஸ்கலுக்காகக் கடன் வாங்கவேண்டுமாம், நான்.

# னக்கும் ஒரு மச்சினன்



சுட்டெரிப்பதுபோல் அவளைப் பார்த்துக் கொண்டே அறைக்குள் நுழைந்தேன். நாளைக்கு அணிந்து கொள்ள வேண்டிய ஆடைகளை 'அயர்ன்' பண்ண வேண்டும். நான் இப்போது அவசர அவசரமாய் வீடு திரும்பக் காரணமே அதுதான்.

ஆனால், கொடிக் கயிற்றில் ஒரு துணியைக் கூடக் காணோம். காலையில் துவைத்துக் காயப் போட்டவை.

''எங்கே என் பாண்ட், ஷர்ட்டெல்லாம்.''

''சுரேஷ் வந்தான், இல்லையா. எல்லாவற்றையும் இஸ்திரி போட்டு வைத்துவிட்டான்.''

''ஓ... காக்காய் வேறு பிடிக்க ஆரம்பித்து விட்டானா...?'' வெறுப்பை உமிழ்ந்தேன்.

''அப்படியொன்றும் இல்லை. இங்கு வந்தான் என்றால், என்னோடு பேசிக் கொண்டே ஏதாவது ஒரு வேலை செய்வதுதானே அவனது வழக்கம். போன வாரம் கூடத்தான் உங்கள் துணிகளை இஸ்திரி பண்ணி வைத்தான். அதற்கும் முதல் வாரம் உங்கள் ஷூவுக்குப் பாலீஷ் போட்டான்... ஞாபகம் இல்லை...?''

இன்னும் என்னவெல்லாமோ அடுக்கினாள், மாலதி.

எனக்கு எதுவும் உறைக்கவில்லை.

சற்றுக் கழித்து, ''சுரேஷ் வந்தால் என்ன பதில் சொல்லட்டும்?'' என்றாள்.

நான் ஒன்றுமே பேசவில்லை.

நூலகத்தில் நான் படிக்க வேண்டிய பத்திரிகைகள் பாக்கி இருந்தன. அவற்றைப் படிக்கலாம் என வெளியேறினேன்.

வழியில்—

செருப்பு ரிப்பேர்க் கடையில், பாஸ்கர். என்னைக் கண்டதும் கூப்பிட்டான்.

போனேன். ''என்ன ரிப்பேர்?'' என்றேன்.

''ஷூ...'' என்று, கடைக்காரர் 'பாட்டம்' தைத்துக் கொண்டிருந்த காலணியைக் காட்டினான்.

என் புருவவில் பொடிபட்டது. ''இது மாதிரி பிரவுன் கலர் ஷூவை நீ ஒரு நாளும் போட்டு வந்தது இல்லையே?'' என்றேன்.

''இது என்னுடையது இல்லை, சுந்தரம். என் மச்சினனுடையது.''

''ஓஹோ...'' என் மனம் லேசாக அதிர்ந்தது.

மச்சினனின் காலணிகளை 'சரி' செய்து வாங்கிக் கொண்டான், அவன். அவனுடன் சேர்ந்து நானும் நடையைத் தொடர்ந்தேன். அந்தத் திசையில்தானே நூலகம்.

அடுத்து ஒரு லாண்டரிக் கடைக்குப் போனான், பாஸ்கரன்.

பட்டியலை வாங்கிக் கொண்ட கடைக்காரர், கண்ணாடி பீரோவைத் திறந்து இரண்டு பாண்ட்களையும் சட்டைகளையும் எடுத்தார். அதைக் கண்டதும் மேலும் அதிர்ந்தேன், நான்.

''இந்த டிரஸ்கள் யாருடையவை?'' என்றேன்.

''இவையும் அந்தப் பயலுடையதுதான்,'' சொல்லும்போதே பிசிறடித்தது அவன் குரலில்.

நான் வேகமாய் வீட்டுக்கு வந்தேன்.

''என்னங்க... நாளைக்குச் சுரேஷ் வந்தால்...'' என்று பரிதவிப்புடன் ஆரம்பித்தாள், மாலதி.

''நாளைக்கு ஆபீசில் யாரிடமாவது கைமாற்று வாங்கித் தருகிறேன் என்று சொல்'' என்றேன் — உறுதியாக.




வின்ஸ்டன் சர்ச்சிலின் மருமகன் ஒரு தொண தொணப் பேர்வழி. முக்கிய பணியிலிருந்த சர்ச்சிலை தனது தொண தொணப்புப் பேச்சால் எரிச்சலூட்டிக் கொண்டிருந்தார். ''உலகத்தில் யார் புத்திசாலி?'' என்று கேட்டார்.

சர்ச்சில், ''முசோலினிதான்'' என்றார்.

உடனே மருமகன், ''ஏன் நீங்கள் இல்லையா?'' என்றார்.

''முசோலினி தனது மருமகனை சுட்டுக் கொன்று விட்டாரே! ஆனால், நான் அப்படிச் செய்யவில்லையே!'' என்றார் சர்ச்சில்.

மருமகன் வாயைத் திறக்க வேண்டுமே!

தகவல்: ஏ. கே. நாசர்.

# வாய் துர்நாற்றத்தை தடுத்திடுவீர். பற்சிதைவை எதிர்த்திடுவீர்.



# கோல்கேட்டின் பாதுகாப்பு வளையத்தை பெற்றிடுவீர் !

தவறாமல் கோல்கேட் உபயோகிப்பதால்,
உங்கள் குடும்பத்தினரின் பற்களுக்கு ஆரோக்கியம், வலிமை, புத்துணர்ச்சி
தரும் தூய சுவாசம் கிடைக்கிறது.
இதுவே கோல்கேட்டின் பாதுகாப்பு வளையம்.

நீங்கள் பல் துலக்கும் ஒவ்வொரு முறையும்
கோல்கேட்டின் நம்பகமான ஃபார்முலா
செயல்படுவது எப்படி என்றால்...



உணவுத் துணுக்குகள் பற்களுக்கிடையே சிக்கிக் கொள்வதால் துர்நாற்றத்தையும், பற்சிதைவையும் உண்டாக்கும் பாக்டீரியாக்கள் வளருகின்றன.



கோல்கேட்டின் ஒப்பற்ற செயல்புரியும் நுரை ஆழ ஊடுருவிச் சென்று, துர்நாற்றத்தை ஏற்படுத்தும் உணவுத் துணுக்குகளையும் சிதைவு ஏற்படுத்தும் பாக்டீரியாக்களையும் அகற்றுகிறது.



முறையாக கோல்கேட் கொண்டு பல் துலக்குவதால் புத்துணர்ச்சி தரும் தூய சுவாசமும், வலிமை மிகுந்த ஆரோக்கியமும் தருகிறது.

ஒவ்வொரு முறையும் சாப்பிட்ட உடன்,
உங்கள் குடும்பத்தினர் தவறாமல் கோல்கேட்
கொண்டு பல் துலக்கட்டும்.
வாய் துர்நாற்றத்தை தடுத்திடுவீர்.
கோல்கேட்டின் பாதுகாப்பு வளையத்தை பெற்றிடுவீர்.




884.55 Tam

கோல்கேட்டின் புத்துணர்ச்சி தரும்
பெப்பர்மென்ட் சுவை உங்களுக்கு விருப்பமானது !

## 17. நிழல்

இரவில் கட்டிலில் படுத்தபடியே சந்திர சூடன் ரேடியோ கேட்டுக் கொண்டிருந்தார். ஒருமுறை எழுந்து வெற்றிலையைப் போட்டுக் கொண்டு மீண்டும் கட்டிலில் படுத்தார். மேஜை விளக்கின் ஒளி, அருகேயிருந்த ஒரு சிறு நாட்டியப் பொம்மையின் நிழலைப் பூதாகாரமாக எதிர்ச்சுவரில் காட்டிக்கொண்டிருந்தது.

சந்திரசூடன் அந்த நிழலின் விசித்திரக் கோலத்தைப் பார்த்தார். சட்டென்று தாம் நடத்த விரும்பிய 'நிழல்' பத்திரிகையைப் பற்றிய சிந்தனை எழுந்தது.

ஒரு சமயம் கடும் வெயிலில் காலில் செருப்பு இல்லாமல் நடந்தபோது தவித்துப் போய் ஓர் அரச மரத்தின் நிழலில் ஒதுங்கினார். அப்போது நிழலின் சுகத்திலும், அனுபவத்திலும், பத்திரிகைக்கு 'நிழல்' என்ற பெயரைத் தேர்ந்தெடுத்தார். இலக்கியத் தரக்கேடு என்னும் கொடிய வெயிலிலிருந்து இலக்கிய ரசிகர்கள் விலகிச் சுகம் காண அவருடைய 'நிழல்' பத்திரிகைதான் உதவ முடியும்.

'நிழல்' பத்திரிகையைப்பற்றிஎவ்வளவோ திட்டங்கள் போட்டிருந்தார். அதனுடைய அமைப்பு, கொள்கை, எல்லாமே அவருடைய மனத்தில் உருவாகிவிட்டன. ஆனால் பணம்? அதைப் பற்றிய கவலைதான் அவரை உறுத்திக் கொண்டிருந்தது —

என்னுடைய ஆசை ஒரு நிழலாகவே முடிந்து விடுமோ? நிழல் என்பது ஒரு மாயை. ஒளி இல்லையென்றால் நிழலும் இல்லை. ஒளி மட்டும் இருந்தாலும் நிழல் இல்லை. நிழலுக்கு ஒரு பொருள் வேண்டும். உண்மையில் நிழல் என்பது, ஒளியில்லாத ஒன்று. ஆனால் அது ஒளியினால் தோற்றுவிக்கப்படுவது! ஒளி இல்லையேல் நிழலும் இல்லை. ஆனால் ஒளிக்கில்லாத ஒரு சிறப்பு நிழலுக்கு உண்டு. நிழலுக்கு உருவ அமைப்பு உண்டு.....

நிழலைப் பற்றிய ஆழ்ந்த சிந்தனையில் சந்திரசூடன் மூழ்கியிருந்தபோது வாசலில் காலடி ஓசை கேட்டது. சிந்தனை கலைந்தவராய்ப் படுத்திருந்தபடியே திரும்பிப் பார்த்தார். முத்துராமன் நின்று கொண்டிருந்தான்.

''வணக்கம் சார்'' என்றான்.

''வா, வா'' என்று வரவேற்றார்.

அடக்கத்துடன் உள்ளே வந்து அமர்ந்தான், முத்துராமன். சந்திரசூடன் எழுந்து தலையணையின் மீது சாய்ந்து உட்கார்ந்தார்.

''வேலை ஒழுங்காகச் செய்கிறாயா?'' என்று கேட்டார்.

''ஆமா சார். அச்சகத்தில் எழுத்துக் கோக்கும்வேலையை நன்றாகப் பழகிக்கொண்டேன். எனக்குப் பிடித்தமான வேலைதான். உங்களுடைய புத்தகத்திற்கு அச்சுக் கோக்கும் போது ரொம்ப உற்சாகமாயிருக்கிறது.''

''எப்படியோ நீ ஒழுங்காக இருந்தால் சரிதான்.''

''இனிமேல் ஒழுங்காகத்தானிருப்பேன். நான் உண்டு, என் வேலை உண்டு'' என்று கூறிச் சிரித்தான். ''என் புதுக் கவிதைகளையும் அச்சுக் கோத்துப் பார்த்துக் கொள்வேன்.''

''ஓ....! யார் படிக்கிறார்கள்?''

''நான் எழுதியதை யார் படிக்கப் போகிறார்கள்? என்னுடையதை அச்சுக் கோத்துக் காலி பேப்பரில் அச்சிட்டு நானே படித்துக் கொள்வேன்'' என்று சொல்லிச் சிரித்தான். பிறகு, ''சார், உங்கள் பத்திரிகையில் என் கவிதைகளைப் பிரசுரிக்கச் சிபார்சு செய்ய முடியுமா?'' என்று கேட்டான்.

''எழுத்திற்குச் சிபார்சு எதற்கு? நன்றாக இருந்தால் போடலாம்'' என்றார் சந்திரசூடன்.

முத்துராமன் தன் சட்டைப் பையிலிருந்து ஒரு பழுப்பு நிறத் தாளை எடுத்து நீட்டினான். சந்திரசூடன் அதை வாங்கி மேஜை விளக்கில் படித்தார்.

''ஆதியில் இருந்தது
இருள்.
பிரமன் ஒளியைப் படைத்தான்
அத்துடன் நிறுத்தியிருக்கலாம்
வேலையற்றுப் போய்
உலகைப் படைத்தான்
விளைந்ததென்ன?
நிழல்!
இருளுக்கு மற்றொரு பெயர்.''

படித்ததும் சாய்ந்திருந்தவர் நிமிர்ந்து உட்கார்ந்தார். மறுபடியும் அதைப் படித்தார். வியப்புடன் முத்துராமனை நிமிர்ந்து பார்த்தார். அவன் வருவதற்கு முன்பு அவர் நிழலைப் பற்றித்தான் சிந்தித்துக் கொண்டிருந்தார்.

# உணர்வுகள் உறங்குவதில்லை

நிழல் என்பது இல்லாத ஒன்று என்றல்லவா அவருடையசிந்தனை ஓடியது. இவன், ஆதியில் இருந்தது இருள் என்று தொடங்கியிருக்கிறானே!

''எப்படி சார் என் கவிதை?''

''கவிதையை பற்றி நான் ஒன்றும் சொல்ல மாட்டேன். ஆனால் உன் இருள் பற்றிய சிந்தனை பிரமாதம்.

''அப்படியானால் கவிதை?''—சற்று ஏமாற்றத்துடன் கேட்டான் முத்துராமன்.

''இதில் கவித்துவம் எங்கே இருக்கிறது? கருத்துத்தான் இதில் முக்கியம்.

''அப்படியானால் இது புதுக் கவிதை இல்லையா சார்?''

ர.சு.நல்ல பெருமாள்





பெண்ணின் தந்தை: "நீங்க! உங்க பைய னுக்கு ஜோடிப் பொருத்தம் பாருங்க வேண்டாம்னு சொல்லலை. அதுக் குனு பொண்ணுப் பார்க்க வர்ற போது வெயிட் மிஷினெல்லாம் கொண்டு வந்தது நல்லாயில்லை..."

—வி. சாரதி டேச்சு.

"உன்னுடைய கற்பனை அமைந்திருப்பது நீளவாட்டிலா, அல்லது மடிப்புப் பாணியிலா என்பது முக்கியமில்லை. உன் சிந்தனை என்ன என்பதுதான் முக்கியம். இதையே நீள வாட்டில் எழுதியிருந்தாலும் நன்றாகத் தானிருக்கும். நான் இதை எங்கள் பத்திரிகை யில் போடுகிறேன்" என்று சந்திரசூடன் சொன்னதும் முத்துராமனுக்கு மகிழ்ச்சி கட்டுக்கடங்கவில்லை. பரபரப்படைந்த வனாய் எழுந்து நின்றுவிட்டான்.

"சார், உங்கள் பத்திரிகையிலா? என் னுடைய கவிதையையா? சார், உங்கள் பத்திரிகையில் என் கவிதை வெளியாகும் என்று நான் கற்பனை கூடப் பண்ணிப்பார்க்க வில்லை" என்றான். மீண்டும் மீண்டும் அவருக்கு நன்றி கூறினான்.

சந்திரசூடனுக்கு உள்ளூற மகிழ்ச்சி. அவனைத் திருத்திவிட்டதாகப் பெருமைப் பட்டுக் கொண்டார். ஒவ்வொரு மனிதனும் பரம்பரைக் குணங்களுக்குக் கட்டுப்பட்ட வன் என்னும் தத்துவத்தை உடைத்தெறிந்து விட்டதாக எண்ணி மகிழ்ந்தார். ஆனால் மறு நாள் இரவு, சிட்டி கிளப்பில் குமாரைச் சந்தித்தபோது அதிர்ச்சி தரும் செய்தி கிடைத் தது.

"என்னப்பா, உன் தத்துபுத்திரன் விஷயம் தெரியுமா?" என்று கேட்டார் குமார்.

"என்ன?" என்று பரபரப்புடன் கேட்டார் சந்திரசூடன்.

"அச்சகத்தில் இன்று ஒருவனை அடித்து விட்டானாம். நல்ல வேளையாக மற்றவர்கள் உடனே மறித்துவிட்டார்கள். இல்லையென் றால் ஒரு இரும்புத் தடியால் அடித்தே கொலை செய்திருப்பான்."

"என்ன காரணமாம்?" — சந்திரசூடன் பதறிப் போனார்.

"ஏதோ வாக்குவாதம், வாய்ச் சண்டை யாக மாறிவிட்டது. இவன் உடனே ஒரு இரும்புத் தடியை எடுத்து அவன் மீது பாய்ந்து விட்டான்."

"பிறகு?"

"பிறகென்ன? தற்காலிகமாக இவனை வேலையிலிருந்து நீக்கியிருக்கிறார்கள்."

"போலீஸ் வழக்கு ஒன்றுமில்லையே?"

"வழக்கிற்குப் போகாமல் நான் தடுத்து விட்டேன். இதில் போலீஸ் தலையிட்டால் இவன் கதி அதோகதிதான்."

"எதிராளி இவன் கோபமடையும்படி யாக ஏதோ பேசியிருப்பான்."

"ஓஹோ, பேசினால் கொலையே செய்கிற மாதிரி தாக்க வேண்டுமா?"

"கோபத்தில் நிதானம் இருந்திருக்காது."

"இது பரம்பரைக் குணம். இலேசில் விடாது. கோபம் வந்தால் நீயும் நானும் கொலை செய்யவா பாய்கிறோம்? ஆனால் இவன் 'பாய்கிறானே, இவனைச் சிறையி லிருந்து நீ வெளியே வரவழைத்ததே தவறு" என்றார் குமார்.

சந்திரசூடன் குழம்பினார். முத்துராமனின் கற்பனைத் திறன் நினைவில் வந்தது. சட்டைப் பையிலிருந்த அவனுடைய 'புதுக் கவிதை' யை எடுத்துக் குமாரிடம் கொடுத்தார். குமார் அதைப் படித்துவிட்டுச் சொன்னார், "பய லுக்கு மூளை இருக்கிறது. என்ன பயன்? மூளையை வேலை செய்ய விடாமல் குணம் தடுத்து விடுகிறதே. முன்னோர்கள் ஆராய்ந்து தானே பாடி வைத்தார்கள்; குலத்தளவே ஆகுமாம் குணம் என்று."

சந்திரசூடன் மிகவும் குழம்பிப் போய் விட்டார். முத்துராமனைத் தம்முடைய கண் காணிப்பிலேயே வைத்துக் கொண்டால் என்ன என்றுகூட நினைத்தார். அவருடைய மேற்பார்வையில் உள்ள அனாதைப் பள்ளி யிலோ, தர்ம வைத்திய நிலையத்திலோ அவனைப் பணிபுரிய வைக்கலாம் என்று நினைத்தார். ஆனால் அந்த இரண்டு நிறுவனங் களிலும் பெண்களின் ஆதிக்கம் அதிகம். இவனை அங்கு எப்படி வேலைக்கு அனுப்பு வது? பெண் இனத்தின் மீதே இவனுக்குக் கோபம்.....

தமக்கே அவன் மீது நம்பிக்கை விழவில்லை என்பதை உணர்ந்து துணுக்குற்றார். நம் பிக்கை இல்லாமல் அவனைத் திருத்தும் பொறுப்பை அவர் எப்படி நிறைவேற்ற முடி யும்?

சந்திரசூடன் நம்பிக்கையை இழந்துவிட வில்லை — எனக்கே அவன் மீது நம்பிக்கை இல்லையென்றால், பிறகு எந்தத் தைரியத்தில் அவனுடைய விடுதலைக்காகப் பாடுபட் டேன்? அவனைத் திருத்தி விட முடியும். சூழ் நிலைதான் தேவை. நல்ல சூழ்நிலையில் அவனை வைத்தால் அவனுடைய குணம் மாறும். ஜீன்ஸாவது, மண்ணாவது......?

(தொடரும்)

வாசகர்...

### தமிழக அரசின் ஏகபோகக் கொள்ளை

தமிழக அரசின் நேரடி நெல் கொள்முதல் என்ற பெயரில், நுகர் பொருள் வாணிபக் கழக நிர்வாகிகள், அடித்து வரும் கொள்ளைகளை, நமது உணவு அமைச்சர் கண்டு கொள்ளவே மாட்டார் போல் இருக்கிறது! பல்வேறு கஷ்டங்களுக்கு இடையில் ஏழை விவசாயிகள், பாடுபட்டு, குறுவை அறுவடையை முடித்தும், அதற்குரிய பயனைப் பெற முடியாமல் 'கப்பம்' கட்டிஞல்தான் காரியம் நடக்கிறது! 'முன் பணம்' தருபவர்களுக்கு மட்டுமே முன்னுரிமை அளிக்கப்படுகிறது! நெல் கொள்முதல் நிலையத்தாருக்கு, வாய்க்கட்டு போடாவிட்டால், நெல்லின் தரம் குறைவு என்று பணத்தை 'கட்' செய்து விடுகிறார்கள்! தமிழக அரசால் ஏக போகக் கொள்முதல் என்ற பெயரில் ஏழை விவசாயிகளிடம் அடிக்கப்பட்டு வரும் இந்த ஏக போக கொள்ளை, எப்போதுதான் தீருமோ?

— ஆ. மோகன்குமார், நீடாமங்கலம்.

### உயிருடன் விளையாடும் டிரைவர்கள்

கடந்த மாதத்தில் ஒருநாள் தஞ்சையிலிருந்து நாகூருக்குச் சென்று கொண்டிருந்த சோழன் போக்குவரத்துக் கழக பேருந்து ஒன்று கோரமான முறையில் ஒரு கோயில் அருகே விபத்துக்குள்ளானது. அப்பேருந்தில் பயணம் செய்த ஒரு நண்பர் அந்த விபத்துக்கான காரணத்தைக் கூறிய போது திடுக்கிட்டுப் போனேன்.

ஒரு கையில் சிகரெட்டும், மறு கையில் ஸ்டியரிங்குமாகப் படு வேகமாகத் தஞ்சையிலிருந்து பேருந்தை ஓட்டி வந்த பஸ் டிரைவர், பேருந்தை அம்மாபேட்டை என்ற ஊரில் நிறுத்திச் சாராயம் குடித்து விட்டு வந்து பேருந்தை ஓட்ட ஆரம்பித்தாராம். பயணிகளில் சிலர் அப்போதே அவரைக் கண்டித்தனராம். இருந்தும் அவர் குடிபோதையுடன் நிதானமின்றி, பஸ்ஸை ஓட்டியதால், பஸ் சாலையில் இருந்த புளிய மரத்தில் மோதிவிட்டது. அந்த டிரைவர், அங்கேயே இறந்துவிட்டார். பல பயணிகளின் உயிருடன் விளையாடும் அவர் போன்ற குடிபோதை டிரைவர்களை அரசு என்னதான் செய்யுமோ?

— எஸ். ஏ. கோவிந்தகுமார்,
நீடாமங்கலம்.

### கொள்ளைக் கும்பலோடு கூட்டுச் சேர்கிறதா வானொலி?

கடந்த 7.11.85 அன்று காலை 7 மணி 30 நிமிடம் 10 விநாடிக்கு ஆரம்பித்து 8 மணிக்குச் சரியாக திரைப்படப் பாடல் ஒலி பரப்பு நிகழ்ச்சியை முடித்த திருச்சி வானொலி நிலையத்தாருக்கு கின்னஸ் புத்தகத்தில் இடம் பெற ஆசை வந்துவிட்டது போலும். முதல் பாடலுக்கு முன் 12 விளம்பர ஒலிபரப்புகள். பிறகு இரண்டாவது பாடலுக்கு முன் 29 விளம்பர ஒலிபரப்புகள். அதற்குப் பிறகு மூன்றாவது பாடலே கிடையாது. 34 விளம்பர ஒலிபரப்பைத் தொடர்ந்து காலை 8 மணி ஹிந்திச் செய்தியறிக்கை. 34 விளம்பரத்தில் கடைசி நான்கும் ஹிந்தி விளம்பர ஒலிபரப்பு. மொத்தத்தில் 75 விளம்பரங்களை வைத்த அவர்களைப் பார்க்கும்போது விளம்பரங்களுக்கிடையில் அலுப்பு ஏற்படாமல் இருக்க இரண்டு திரைப் பாடல் என்ற பிரமையையே உருவாக்கியது. இந்த லட்சணத்தில் வர்த்தக ஒலிபரப்பு என்ற தனி அலைவரிசை வேறு. விடிவே கிடையாதா? கொள்ளையடிக்கும் கும்பலோடு கூட்டுச் சேருகிறது இந்த வானொலி நிலையமும்!

— ஆங்கரை ஆனந், ஆங்கரை.

### நாகரிகமற்ற நடத்துனர்

நான் என் மனைவியுடன் 18.10.85 காலை 8.30 மணியளவில் என் குடும்ப நண்பரின் வீட்டிற்குப் (எடப்பாடி 777/ஜெயபிரகாஷ்) பஸ்ஸில் போனேன். புறப்படும் போதே நடத்துனரிடம் ஏழு ரூபாய் செலுத்தி எடப்பாடிக்கு இரண்டு டிக்கெட் வாங்கிக் கொண்டோம். முன் இருக்கையில் இரண்டு பெண்கள் இருந்தார்கள். ஒரு ஸீட் காலியாக இருந்ததால் அவர்களுடன் என் மனைவி அமர்ந்தாள். நான் அடுத்த இருக்கையில் அமர்ந்திருந்தேன். சில மைல்கள் கடந்த பின்பு டிக்கெட் வாங்காதவர்களைக் கேட்டுக் கொண்டிருந்தார். என் பின்புறத்திலிருந்து என் தலையில் தட்டி, 'டிக்கெட், டிக்கெட்' என்றார். நான் இரண்டு டிக்கெட்டையும் காண்பித்து என் முன்னால் இருந்த என் மனைவிக்கும் வாங்கப்பட்டுள்ளது என்று கூறினேன். என் சீட்டைத் தாண்டி என் மனைவியுடன் இருந்த மூன்று பெண்களையும் முதுகிலும், கையிலும் தட்டி இதே போல் 'டிக்கெட், டிக்கெட்' என்றார். பெண்களைத் தொடுவதற்கு யோசிக்க வேண்டாமா? சொந்த சகோதரி, மகளாக இருந்தாலும் கூட தொட்டுப் பேசக் கூச்சப்படும் நாகரிக மனிதர்களும் உள்ளனர். நான் என்னிடம் டிக்கெட் என்று கேட்டவுடன் டிக்கெட்டையும் காண்பித்து ஆளையும் காண்பித்துள்ளேன். தெரிந்து கொண்டு முதுகையும் தலையையும் தட்டிஞல் அதற்குஎன்ன அர்த்தம்? அன்றாடம் பயணிகளிடம் பழகவேண்டிய ஒரு நடத்துனர் நாகரிகம் தெரிந்தவராக நடந்து கொள்ள வேண்டாமா? தயவு செய்து எனது பெயரைப் பிரசுரிக்க வேண்டாம். நண்பர்கள் துக்கம் விசாரிக்க வந்துவிடுவார்கள்.

...குரல்

இந்த நூற்றுண்டில் ஒரு ரோஜாத் தீவு. அங்கே ஒரு டெல்லி கணேஷின் ராஜ்யம். அவர் மனைவி; அவர் குழந்தைகள். இவர்களை ஆளுக்கொரு திசையாகப் பிரித்து ஏழு கடல், ஏழு மலை தாண்டி ஒவ்வொருவரை யும்ஒளித்துவைக்கும்வில்லன்ரவிச்சந்திரன்.சுலக்‌ஷணா. டெல்லி கணேஷின் பெண். அவர் ஒரிஜினல் இளவரசி. இந்த இளவரசி மேல் நாட்டில் படித்து ஊருக்குத் திரும்பி வருகையில் ஏர் போர்ட்டிலேயே மடக்கப் பட்டுத் தப்பித்து. அப்புறம் போலீஸ் ஆஃபீஸர் கிஷ்மு. விசு, மனோரமா, அப்புறம் சின்ன வயசுத் தோழன் கார்த்திக் ஆகியோர் உதவியுடன் குடும்பத்தோடு சேர் வதாக — ஹூம் ஒரு கதை!

ரவிச்சந்திரன்தான் இந்தப் படத்தின் ஹீரோ என்று சொல்லும் அளவுக்குச் சரியான வில்லத்தனமான நடிப்பு. இறுகிய முகம். கையைச் சுழற்றி அடிக்கும் பாங்கு. ஒரு காலை லேசாக வளைத்து வளைத்து நடக்கும் நடை ஜோர். விசுவிற்கு ஆஃப் டிராயர் மாட்டின வேஷம்.காமெடிமுயற்சிசெய்திருக்கிறார்;பரவாயில்லை.

லாஜிக்கையெல்லாம் பறக்கவிட்டு மெட்ராஸ் வீதி யில் பாட்டுப் பாடிக் கண்டு பிடிக்கிறார்கள். டாக்டர் வேஷம் போட்டு மூன்று ஜோடிகள் அமர்க்களப்படுத்து கிறார்கள். அங்கங்கே சிரிப்பு. அங்கங்கே அழுகை. அங்கங்கே சண்டை. அங்கங்கே கேட்கிற மாதிரி பாடல் கள்.

**ராசிபலன் :—** கார்த்திக் நட்சத்திரத்தை நம்பி ஒரு படம். சூரிய சந்திரனைச் சுற்றி (ரவிச்சந்திரன்) ஏகப் பட்ட நட்சத்திரங்கள் கண்ட கண்ட பாதையில் வெட்டிக் கொள்கின்றன. ஆப்பிரிக்க நடனம் ஆடுகின்றன! சினிமா உலகையே. கிட்டத்தட்ட ஏழரை ஆண்டுகளாகப் பிடித்திருக்கும் மசாலா சனீஸ்வரனின் பார்வை மிக உக்கிரமாக இருப்பதால் இந்த ராசி நேயர்களுக்குச் சில சமயம் நல்ல பலனும் உண்டு. சில சமயம் ஒரே யடியாக அழுத்தி விடுவதும் உண்டு. ஆனால் இந்தத் தீபாவளிக்கு வந்திருக்கும் மற்ற ராசிக்காரர்களின் பலம், பலவீனம், பலாபலன் ஆகியவற்றை வைத்துப் பார்க்கும் போது இந்த ராசிக்காரர்கள் இந்த மசாலா சனீஸ்வர பார்வையாலேயே தப்பித்து விடுவார்கள் போலத்தான் உள்ளது.



# கெட்டி மேளம்



டைம் மெஷின் என்...
படம் பார்க்க உட்கார்...
தூக்கிக் கொண்டு பு...
கொண்டு தள்ளி வி...
கிலிருந்து ஆரம்பித்து...
ஒட்டடை.

நளினியோ, சுரேஷ...
எதுவுமே சுறுசுறுப்பா...
தான் ஒரே ஆறுதல்...
சுரேஷைக் கல்யாண...
விரவிலேயே மர்ம மனி...
மறைக்க நவீன ஹெல்...
பட்ட பிறகுதான் கதை...
'யார் அந்தக் கெ...
கேள்விக்காக நான்கு...
சுற்றிச் சுற்றி வரச்...
மர்மக் கதை அமைக்...
நளினியின் ஆவியையு...
(ரசிகர்கள் செய்த...
வேலையாகச் சாமி ஓ...
எடுக்க நினைத்து ச...
'சப்'பென்ஸ் படம்.

**ராசிபலன் :** ஏகப்ப...
நட்சத்திரங்களும் ஒன்...
டிருப்பதால் இந்த ராசி...
பலனைச் சொல்லமுடி...
படும் நேரம் மட்டும்...
புதுமை விரும்பிகள்...
பரிகாரம் தேடிக் கொ...

...ஷா



...கேள்விப்பட்டிருக்கிறீர்களா?
...ஓம், சிட்டோடு அலாக்காகத்
... வருஷத்திற்கும் பின்னல்
...பிரமை. டைட்டில் மியூஸிக்
...த்தனையிலும் அப்படியொரு

... காலேஜ் அட்மாஸ்ஃபியரோ
...லாத நேரத்தில் கவுண்டமணி
...முதல் பாதிப் படம் வரை.
...செய்து கொண்டு வந்து முத
...ல்(ரெயின் கோட்; முகத்தை
...ட்!) நளினி கொலை செய்யப்
...ல் தேய்க்கிறது.
...காரன்?' என்ற தலையாய
...ந்து ஆண் காரெக்டர்களைச்
...ால்கிறார்கள். ஒரேயடியாய்
... சாமர்த்தியம் போதாமல்
...லீனக்குக் கூப்பிடுகிறார்கள்.
...ரும் புண்ணியத்தால் நல்ல
...ம் பாட்டு ஏதும் இல்லை!)
...பென்ஸ் படம். எடுத்திருப்பது

... கிரகங்களும், எண்ணற்ற
... ஒன்று குறுக்கிட்டுக் கொண்
...நேயர்களுக்கு ஒரு ஸ்திரமான
...ு. கவுண்டமணியின் பார்வை
...காஞ்சம் ஆறுதலாயிருக்கும்.
...டும் வேறு படம் பார்த்துப்
...ாலாம்.

# தீபாவளி ராசிபலன்கள் - 2

'பாஸ்போர்ட் ரெடியா?'

'ம்.

'எல்லோருக்கும் விசா வந்தாயிற்றா?'

'ம்.'

'கிளம்புங்கள் ஜப்பானுக்கு' என்று டிமோடு கிளம்பிப் போய் விட்டார்கள். எடுத்துப் போகாமல் மறந்து விட்டுப் போன ஒரு அயிட்டம்: திரைக்கதை.

ஜப்பானின் உயர உயரக் கட்டடங்கள், பிரமிப்பூட்டும்சாலை அமைப்புகள், எலெக்ட்ரானிக் அசுர அற்புதங்கள், எக்ஸ்போ—85 கடை விரித்த ராட்சஸ குடை ராட்டினங்கள் என்று தேனும் சர்க்கரையும் குழைத்த காட்சிகள். நினைத்த போது திடீரென்று நாலு பேர் தெருவில் முளைத்து கமலஹாசனோடு டிஷ்யூம், டிஷ்யூம். கொஞ்சம் சத்யராஜ். டைட்டிலிலும், படத்திலும் இருந்தாலும் சரியாகப் பயன்படுத்திக் கொள்ளாத 'பல்லாண்டி' கல்யாணத்தின் ஆவி. இப்படியே ஒன்றோடு ஒன்று ஒட்டி நிற்காத காட்சிகள்.

லக்கி பிரைஸில் ஓஸியில் ஜப்பான் போய் வர கவுண்டமணிக்கும் கோவை சரளாவுக்கும் சான்ஸ் கிடைக்கிறது பாருங்கள், அதுதான் ரசிகர்களுக்கும் லக்கி பிரைஸ். 'இன்னும் கொஞ்சம் தள்ளி நில்லுய்யா, அப்பத்தான்ஃபோட்டோவிழும்' என்றுநகரச்சொன்னதும், நாலடி, பத்தடி என்று நகர்ந்து கொண்டே போய் விட்டு, 'டிக்கெட்டைக் கொடுய்யா, நான் இப்படியே ஊருக்குப் போயிடறேன்' என்று சொல்லுமிடத்தில் தியேட்டரே அதிர்கிறது. இன்னும் கவுண்டமணி வரும் போதெல்லாம் இந்த மாதிரியான சமயோசித வெடிகள் வெடிக்கிறது.

**ராசிபலன்:** ஸ்டண்ட், காதல்இவற்றின் அதிபதியான கமலஹாசன், ஷோ பொம்மை ராதா, வில்ல ராசி சத்யராஜ், ஹியூமர் நட்சத்திரம் கூடிய கவுண்டமணி என்று எல்லோரும் ஜப்பானில் சஞ்சரித்தாலும், இசையின் குருவாகச் சொல்லப்படும் இளையராஜா முழு பலத்துடன் செயல்படாததாலும் வேறு கவர்ச்சி அம்சங்கள் குறைந்திருப்பதாலும் இந்த ராசி நேயர்களுக்கு சந்தோஷ நலிவும், ஒரு திருப்தியின்மையும் நிலவும். ஆடம்பர வர்ண ரசிகர்களுக்குக் கொஞ்சம் திருப்தி கிடைக்கலாம்.



## ஜப்பானில் கல்யாணராமன்

# 3

மருத்துவமனையின் தீவிரக் கவனிப்புப் பகுதியை அவர் அடைந்த போது, அந்த டாக்டர் இளைஞன் கண்ணாடிக் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தான். மருத்துவமனைத் தலைவரின் பல உதவி டாக்டர்களில் அவன் ஒருவன். மருத்துவக் கல்லூரியிலிருந்து வெளிவந்து ஆறு மாத காலம் கூட இருக்காது. ஆனாலும் மண்டைக்கனம் அசாத்தியமாக இருந்தது அவனுக்கு. தனது பட்டத்தைத் தலையில் சுமப்பவன் போல் நெஞ்சை நிமிர்த்திக் கொண்டு நடந்தான். அழுத்தலாகப் பதிலளித்தான்.

''இப்போ விமலா எப்படி இருக்கிறாள் டாக்டர்?'' என்று ஆதங்கம் தாளாது கேட்டார் சுவாமிநாதன்.

''பரவாயில்லை,'' என்றான் அவர் முகத்தைப் பாராமல்.

''நினைவு வந்துவிட்டிருக்கு. அதனாலே அவளை இங்கேயிருந்து சாதாரண வார்டுக்கு அனுப்பிவிடுவாங்க இல்லையா?''

''நினைவு வந்துவிட்டாப் போதுமா? மற்றபடி உடம்பு பூரண குணமாக வேண்டாமா? இன்னும் சில நாட்கள் இங்கேயே அவள் இருக்க வேண்டும்!''

''அவளுக்கு உடம்புக்கு என்னன்னு கண்டுபிடிச்சிருக்கேள்?''

''டயாக்னோஸ் கேட்கிறீங்களா — அதுக்கு ஐந்து வருஷங்கள் படிச்சாகணுமே?'' அவனது கேலிப் பேச்சு அவர் மனத்தைக் குத்தியது.

வேதனையை விழுங்கிக் கொண்டார்.

''இன்னும் சில நாட்கள் இங்கேயே இருக்கணும்னு சொல்றேளா?'' தலையை ஆட்டிவிட்டு அவன் வராந்தாவில் வேகமாக நடந்து மறைந்து போனான்.

விமலாவுக்கு வந்துள்ள நோய் என்ன? எப்போது குணமாகும்?

மருத்துவமனையில் உத்தேசமாக அவள் எத்தனை நாட்கள் தங்கும்படி நேரிடும்? இத்யாதி விவரங்களையெல்லாம் அவர் தெரிந்து கொள்ளத் தவித்தார். ஆனால் எல்லாம் ஒரே மூடு மந்திரமாக இருந்தது. தலைவரை நேரே அவரது அறையில் சந்தித்துக் கேட்கலாம் என்றாலோ மனிதர் அணுக முடியாத அளவில் புலியோ — சிங்கமோ போல் ஒரு பயங்கர உணர்வை உண்டாக்கிவிட்டிருந்தார்.

வார்டுக்குள் நுழையும் போதே முகத்திலே ஒரே சிடுசிடுப்பு. தமது உதவி டாக்டரிடம் அடிக் குரலில் அதட்டிப் பேசினார். நோயாளிகளின் உறவினர்களைத் தூசித் துரும்பைப் பார்ப்பது போன்றதொரு அசட்டைப் பார்வையில் கவனித்தார். ''டாக்டர்...! டாக்டர்...'' என்று குழைந்தபடியே அவர் பின்னால் ஓடிய உறவினர்களிடம் சிங்கம் போல் சீறினார்.

''இங்கே கொண்டு வந்து எங்கள் கவனிப்பில் விட்டு விட்டிருக்கீங்க இல்லையா? பிறகு பேசாமல் இருங்கோ. என்ன செய்யணும்னு எங்களுக்குத் தெரியும்...'' என்று பெரிதாக அத்தட்டல் போட்டார்.

திருவல்லிக்கேணி தேவராஜன் தெருவில் அவர்கள் வசித்த போது சாலை முகப்பில் கிளினிக் வைத்திருந்த டாக்டர் சம்பந்தமிடம்தான் அத்தனை ஆண்டுகளாகக் கால் வலி — தலைவலிக்கு வைத்தியம் செய்து கொண்டவர். தொள தொளா பாண்டும் சட்டையுமாக... எந்தவித ஆர்ப்பாட்டமுமின்றி... புன்னகையோடு கேட்ட கேள்விகளுக்கு அலுக்காது பதில் சொல்லிக் கொண்டு வந்த அந்த மகராஜன் ஓராண்டுக்கு முன்னர் காலமாகி விட்டதும் — சுவாமிநாதன் வேறு டாக்டர்களையே பார்க்காது தம் காலத்தை ஓட்டினார்.

இப்போது திடும் என்று விமலாவுக்குப் பெரிய அளவில் உடம்புக்கு வந்துவிட்டது.

'எங்கே போவது? யாரை அழைப்பது?' என்று சிந்திக்க நேரம் தராது வீட்டுக்கார அம்மாள் அவளைத் தானே கொண்டு வந்து மாருதி நர்ஸிங் ஹோமில் 'அட்மிட்' செய்து விட்டாள்.

பணக்கார ஆஸ்பத்திரி அது. டாக்டர்களிடம் காணப்பட்ட மிடுக்கும் ரொம்ப பணக்காரத்தனமாகவேதான் இருந்தது.

உடனடியாக ஆஸ்பத்திரிக்குக் கட்ட வேண்டிய உத்தேசமான தொகையை அவளே கட்டிவிட்டிருந்தாள்.

முதல் நாள் அவருக்கு ஏற்பட்டிருந்த கவலையில் அவர் பணத்தைப் பற்றிச் சிந்திக்கவேயில்லை.

அடுத்தநாள் காலை — குளித்து மாற்றுடை அணிய அவர் வீட்டுக்கு வந்த போது வேலைக்காரி வசம் மருத்துவமனை கொடுத்த பில்லை அனுப்பியிருந்தாள் வீட்டுக்கார அம்மா.

அதைப் பிரித்துப் பார்த்தவர் திடுக்கிட்டுப் போனார்.

பில்லில் மூவாயிரத்து ஐந்நூறு என்று காணப்பட்ட தொகை அவரை ரொம்பவே மிரளச் செய்தது.

டாக்டர்கள் நோயாளியைக் கவனிக்க வரும் நேரத்தில் வராந்தாவில் நின்று கொண்டிருப்பதை விட்டு அவர் தமது வங்கிக்கு விரைந்தார். அவசரத் தேவைக்கு என்று அவர் தமது சேமிப்பு நிதியில் ஆறாயிரம் ரூபாய்களை விட்டு வைத்திருந்தார்.

இப்போது அந்தத் தொகையில் கைவைக்கும் அவசரம் வந்துவிட்டது.

பணத்தைஎண்ணிப்பவ்யமாகச்சாப்பாட்டறை மேஜை மீது அவர் வைத்த போது வீட்டுக்கார அம்மாள் புன்னகை செய்தாள்.

''இதுக்கு இப்போ என்ன அவசரம்?''

பணத்தைக் கொடுத்துவிட்டு வேகமாக மருத்துவமனைக்குக் கிளம்பச் செருப்புகளைக் காலில் திணித்துக் கொண்டவர் அருகே வந்தாள் அவள்.

''இது ஒரு வார காலத்துக்கு உண்டான தொகையே! ஓரளவு முன்னதாக அவர்கள் வாங்கிக் கொள்வது வழக்கம். பணம் கட்டாது, நோயாளி நடையைக் கட்டிவிடாதிருக்க இது ஒரு முன் எச்சரிக்கை...!'' மெல்லச் சிரித்தாள் அவள்.

**லக்ஷ்மி**

நடையைக் கட்டாது நோயாளி மண்டையைப் போட்டுவிட்டால்...?'

தொண்டை வரை எழுந்த கேள்வியை விழுங்கிக் கொண்டார்.

'சே! என்ன மட்டமான எண்ணம்?'

விமலா பிழைத்து வீடு வந்து சேர்ந்துவிடுவாள் என்று நினைப்பதை விட்டு — சே! விமலாவுக்கு இல்லாத பணம் யாருக்குத் தேவை? இவ்வாறு எண்ணியபடி மருத்துவமனைக்குக் கிளம்பினார்.

ஆனாலும் அடிக்கடி மனத்திலே ஒரு நெருடல்.

விமலாவை அந்தப் பணக்கார நர்ஸிங் ஹோமில் இன்னும் எத்தனை நாட்கள் வைத்துப் பராமரிக்கக் கட்டுப்படியாகும்?

விமலா நல்ல நினைவோடு இருந்திருந்தால் ஒப்புக் கொண்டிருக்க மாட்டாள்.

வேண்டாம். அவர்களையெல்லாம் கேட்கக் கூடாது என்று தடுத்திருப்பாள்.

குடும்பத்தின் ஆலமரமாக இருந்த அந்தப் பழைய நினைப்பு அவருக்கு. கூட்டிலிருந்து பறந்துவிட்ட குஞ்சைத் தேடிப் போகும் தாய்ப் பறவையின் தவறான செய்கை அது.

தம்பியின் அலுவலகத்திற்குப் போன் செய்தார்.

ரிஸப்ஷனிஸ்ட் தொடர்பு கொடுக்கும் வரை நெஞ்சு திக்திக்கென்று அடித்துக் கொண்டது. உடம்பு ஒரு சாணகக் குறுகி விட்டது போன்றதொரு அவமான உணர்வு நெஞ்சை இறுக்கியது.

''விமலாவுக்குத் திமர்னு உடம்புக்கு வந்து விட்டது. மாருதி நர்ஸிங் ஹோமில் சேர்த்திருக்கேன்'' என்று தடுமாறினார்.

தம்பியின் குரலில் உற்சாகம் இருக்கவில்லை.

''மாருதி நர்ஸிங் ஹோமிலா அண்ணா!''

''அதுதான் அருகில் இருக்கு. போய் வர எனக்குச் சௌகர்யமா இருக்கு!''

''அதெல்லாம் நமக்குக் கட்டுப்படியாகிற இடமில்லையே?''

''அவசரத்துக்கு வேறே எதுவும் என் நினைவுக்கு வரலே!''

பண உதவி தேவை என்று கேட்க அவருக்குக் கூச்சமாக இருந்தது. பெற்ற மகனைப்



போல அடி நாளில் அவர் பாதுகாத்து வளர்த்து ஆளாக்கிய தம்பிதான் அவன். விமலா மன்னிக்கு உடம்புக்கு வந்துவிட்டது என்று கேட்டதும் துடிதுடித்துப் போவான் என எதிர்பார்த்தவருக்குப் பெருத்த ஏமாற்றம்.

'மன்னி! என் கால் வலிக்கிறது. இன்னிக்குப் பள்ளிக் கூடத்திலே டிரில் கிளாசிலே எங்களை ரொம்பவே பாடுபடுத்திட்டார் மாஸ்டர்....' என்றுபொருமிக்கொண்டு வருகிற அவனுக்கு விமலா எத்தனை உபசாரம் செய்திருக்கிறாள்?

''வெந்நீர் சூடா வச்சுத் தரேன். பள்ளிக்கூட உடுப்புகளைக் கழற்றிவிட்டு, முதல்லே குளி. கால்களில் வெந்நீரைச் சூடா விட்டுக்கோ. விடமின் பி மாத்திரை சாப்பிட்டாக் கால்வலி வராதுன்னு நம்ப டாக்டர் சம்பந்தம் சொல்லியிருக்காரே? மருந்துக் கடையிலிருந்து கொஞ்சம் பி. காம்ப்ளெக்ஸ் வாங்கித் தரேன். நிறைய பால் தயிர் போட்டுக்கோ'' என்று குழைந்து பேசுவாள். சிறுவனாக அவன் இருந்த போது தட்டம்மை போட்டு.... கூடத்திலே பாயின் மீது முனகிக் கொண்டு கிடந்தவன் பக்கத்தில் இரவு முழுவதும் கண் விழித்துக் கொண்டு, புழுக்கம் தெரியாதிருக்க, ஓலை விசிறியால் விசிறினாள். சொறியாதே புண்ணாகும்-- என்று தடவிக் கொடுத்து, ஆறுதல் சொல்லி வேளைக்குக் கஞ்சி வைத்து உபசரித்து, கட்டிக் காத்தவள் விமலா. அவள் உடம்புக்கு முடியாது நர்ஸிங் ஹோமில் படுத்திருக்கிறாள் என்பதைக் கேட்டதும் மனிதனுக்குச் சிறிது கூட அக்கறை ஏற்படவில்லையே? என்ன விநோதம்?

அவர் கேட்குமுன் தம்பி பதிலளித்துவிட்டான்.

''போன வருஷம் வீடு வாங்க கம்பெனியில் எடுத்த கடன் இன்னும் அடையலை. அதனாலே என்னால் எதுவும் உதவி செய்ய முடியாத நிலையில் இருக்கிறேன். வருத்தமா இருக்கு அண்ணா!''

எச்சிலை விழுங்கிக் கொண்டார். ''வருத்தப்படாதே. நான் எப்படியோ சமாளிச்சுக்கறேன். மன்னி நர்ஸிங் ஹோமில் படுத்துக் கொண்டிருக்காள்னு அருணாகிட்டே சொல்லிடு. எனக்கு அடிக்கடி நர்ஸிங் ஹோமிலிருந்து போன் செய்யறது சிரமமா இருக்கு!''

''விசிட்டர்களுக்குன்னு தனியா போன் வச்சிருக்காளே?''

''ஆமாம். அதிலிருந்துதான் போன் பண்றேன்'' என்றவர் மேலே சொல்லாது நிறுத்திக் கொண்டார். ஒரு தடவை பேச ஒரு ரூபாய் ஆகிறது என்பது அவனுக்குத் தெரியாதா என்ன? என்ற சினம் பொங்கியது.

''என்னை டாக்டர் தேடிண்டு இருப்பார். அதனாலே எனக்காக நீ போன் பண்ணிடு'' என்று கூறிவிட்டுத் தொலைபேசியைக் கீழே வைத்தார். உடம்பு ஆத்திரத்தில் கிடுகிடுவென்று ஆடியது. இந்த ஒரு சின்ன உதவி கூடசெய்யமுடியாத தம்பி அந்தஅலுவலகத்தில் அப்படி வேலையில் மும்முரமாக இருக்கிறானா? பற்களைக் கடித்துக் கொண்டு, தீவிரக் கவனிப்பின் வராந்தாவில் கிடந்த பெஞ்சியின் மீது அமர்ந்தார்.

சிறிது நேரத்தில் அவரைத் தொலைபேசியில் அருணா அழைத்தாள். ''மன்னிக்கு உடம்புக்கு ஆகலையாமே? கேட்டதும் எனக்கு ரொம்ப கவலையா இருக்கு. உடனே வந்து பார்க்க முடியலை. இன்டென்சிவ் கேர் யூனிட்டிலே இருக்கிற நோயாளியை எல்லாரும் வந்து பார்க்க டாக்டர் அனுமதிக்க மாட்டார். பண்டிகை வேலை வேறே எக்கச்சக்கமா இருக்கு. மன்னியை சாதாரண வார்டில் மாற்றி விடும்போது வந்து பார்க்கிறேன். நீங்க தைர்யமா இருங்கோ. தீவிர கவனிப்புன்னா ஆபத்துன்னு அர்த்தமில்லை. நோயாளியை நன்னா கவனிக்கத்தான் அதில் அனுமதிக்கிறா. தீபாவளி மும்முரம் அடங்கட்டும். வந்து பார்க்கிறேன். கிட்டக்க இருந்தாலும் நான் உங்களுக்கு ஏதாவது சமைச்சு அனுப்புவேன். டிரைவர் கூட இப்போ ரொம்ப இடக்கு பண்றான். எதையாவது குடுத்து அனுப்பலாம்னாலும் முடியலை....!''

''நான் சாப்பிடக் கிட்டக்க ஹோட்டல்கள் இருக்கு. விமலாவுக்குப் பத்தியச் சாப்பாடு இப்போ சத்தியா தேவையில்லை. நீ கவலைப் படாதேம்மா... பண்டிகைக்கு என் வாழ்த்துக்கள்.''

அருணா மறுமுனையில் நிம்மதிப் பெருமூச்சுவிட்டாள். எங்கே 'இந்தக் கிழம், பத்தியச் சாப்பாடு, அது இது என்று தொந்தரவு செய்து தொலைக்குமோ என்று கவலைப்பட்டவளுக்குப் பெருத்த நிம்மதி.

பிரஷ் மீசையும், கம்பளிப் பூச்சி புருவங்களுமான மாருதி நர்ஸிங் ஹோமின் தலைவர், தன் பெயருக்குப் பின் வண்டி அளவில் பட்டங்களை சுமக்கிறவர். டெர்லின் ஷர்ட்டைத் தாண்டி மெல்ல துருத்திக் கொண்டிருந்த தொந்தி மேல் ஸ்டெதாஸ்கோப் மாலையாக ஆட, பித்தானிடாத ஆஸ்பத்திரி கோட்டில் தமது பருமனான உடலைப் பாதி மறைத்துக்

# இசைப் பிரியன் என்பவர் யார்?

பாத்ரூமில் குளித்தபடி ஒரு பெண் பாடிக் கொண்டிருக்கிறாள் என்றால், சாவித் துவாரத்தில் கண் வைத்துப் பார்க்காமல் காது வைத்துக் கேட்பவன்!

தகவல்: பிரபுசங்கர்.



''உங்க பையன் தினமும் குடிச்சுட்டு வரானே அவனைக் கொஞ்சம் கேட்கக் கூடாதா...?''

''என்னத்த கேட்கறது? அவன்தான் எல்லாத்தையும் கடையிலேயே குடிச்சுட்டு வந்திடறானே...!''

—வி. சாரதி டேச்சு.



கொண்டுமெள்ளப்பூனை போல்சப்தமிடாது உள்ளே வந்தார்.

அவரைக் கண்டதும் அரண்டு போன சுவாமி நாதன் சட்டென்று நாற்காலியி லிருந்து எழுந்து வெளியே சென்று வராந்தா வில் நின்று கொண்டார்.

கண்ணாடி தடுப்பு வழியே உள்ளே நடப் பதை மட்டும் கவனிக்க முடிந்தது.

முகத்திலே கடுமை பொங்க டாக்டர் விமலாவின் நெஞ்சின் மேல் ஸ்டெதெஸ் கோப்பை வைத்துப் பரிசோதனை செய்து கொண்டிருந்தார்.

நோயாளியின் உறவினர்கள் அவருக்குத் தூசிக்குச் சமம் என்றால், நோயாளி ஒரு புழுவுக்குச் சரி.

நேரிடையாக அவர் எதுவும்பேசுவதில்லை. பக்கத்திலே அவரது பதிலுக்குக் காத்துக் கொண்டு பவ்யமாக நிற்கும் தமது உதவி டாக்டரிடம் பேசிக் கொண்டிருந்தார்.

விமலா கண்களைத் திறந்து அவரைப் பிர மிப்புடன் பார்த்தாள். 'டாக்டர்.... எனக்கு என்ன வந்துட்டது?' மெல்லிய குரலில் கேட் டவளைப் பார்த்து, 'உம்.... உம்.....' என்று தலையசைத்துவிட்டு டாக்டர் தமது உதவி டாக்டரிடம் படபடவென்று பேசினார். பின் னர் பரக் என்று கதவைத் திறந்து கொண்டு, தரையைப் பார்த்தபடி வராந்தாவில் விரைந் தார்.

''ஆமாம், இவர் ஏன் இப்படி குனிந்த தலையோடு வார்டில் வளைய வருகிறார்?'' ஆவலை அடக்க முடியாது பகல் வேளை பணிக்கு வரும் அந்த நர்சை கேட்டுவிட்டார்.

''அதுவா?'' சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு அவள் மெல்லிய குரலில் சொன்னாள்.

''ஒரு நாளைக்குத் தமக்கு வரும் வரும் படியை எண்ணிக் கொண்டே போகிறார். ''இத்தனை பணத்தை எங்கே வைப்பது? பூமியில் புதைப்பதா? ஆகாயத்தில் மறைத்து வைப்பதா என்ற கவலை...'' களுக்கென்று சிரித்தாள் அந்தக் குறும்புக்காரி.

அவரும்கூட தம் கவலைகளையெல்லாம் மறந்து சிரித்துவிட்டார்.

''உங்களுக்குப் போன் வந்திருக்கு''—காக்கி சீருடையில் தெரிந்த மருத்துவமனை காவலாளி வந்து சொன்னான்.

அருணாதான் போன் பண்ணி விட்டாளே, இன்னும் யார் கூப்பிடுகிறார்கள்?

வியப்புடன் எழுந்து சென்றார்.

''பெரியப்பா....!'' மறுபுறம் கேட்ட தம்பி யின் செல்ல மகனின் குரல் அவரது மேனி யைப் புல்லரிக்கச் செய்தது.

''என்னடா கண்ணு, எங்கேயிருந்து பேசறே? தீபாவளிக்கு வீட்டுக்கு வந்திருக் கியா?''

''பெரியப்பா உங்களுக்கு ஆஸ்பத்திரியில் தீபாவளி, எனக்கு பங்களூரில் நான் தங்கி யிருக்கின்ற வீட்டில் தீபாவளி...'' அவனது உற்சாகமான சிரிப்பு மனத்திற்கு ஆறுதலாக இருந்தது.

''பெரியப்பா..., என்கிட்டே உங்களுக்கு எந்தவிதமான கூச்சமும் தேவையில்லை. நர் ஸிங்ஹோமுக்குப்பணம்கட்டத்தேவையானு ஒருவார்த்தைபோனில்சொன்னால்போதும். டிராப்ட் அனுப்பி வைக்கிறேன். உங்களுக்குக் கூட இருந்து உதவ மனுஷ சகாயமா யாரா வது தேவைன்னு உடனே சொல்லுங்கோ, நான் லீவு எடுத்துண்டு வரேன், பெரியப்பா! ஐஸ்வர்யா எனக்கு அமெரிக்காவிலிருந்து டிரங்கால் போட்டாள். அப்போ நான் பெரி யம்மாவைப் பத்தி சொன்னேன். ரொம்ப அதிர்ந்து போயிட்டாள். அம்மா அவளுக்கு ஒண்ணுமே தெரிவிக்கலையாம்....''

''நல்ல நாளும் கிழமையுமா தூரத்தில் வாழும் குழந்தையின் மனத்தைக் குழப்பு வானேன்னு சொல்லாதிருக்கலாம்.''

''தப்பு பெரியப்பா.... நீங்க எங்களுக்கு எத்தனை செய்திருக்கீங்க....''

''என் கடமையைச் செய்தேன்.''

''எங்களுக்குக் கடமை இல்லையா?''

அவனுடன் பேசிவிட்டு போனை வைத் தார்.

'இளைய பாரதத்தினாய் வா, வா... உதய ஞாயிறுஒப்பவே வா, வா....'' எங்கிருந்தோ காற்றில் மிதந்து வந்த இசையைக் கேட்டு ஒரு கணம் திகைத்து நின்றார்.

(தொடரும்)

# உதவிய

### அடி வாங்காமல் தப்பினேன்

நான் பயணம் செய்த பஸ்ஸில் ஒரு வயதான மூதாட்டி ஒரு நிறுத்தத்தில் இறங்கினார். நானும் இரக்கப்பட்டு அவர் உட்கார்ந்திருந்த சீட்டுக்கடியில் இருந்த ஒரு பெரிய பெட்டியை அவருடையதுதான் என்று நினைத்து இறக்கி வைத்தேன். அடுத்த பஸ் நிலையத்தில் அனைவரும் இறங்கியபோது ஒருவர் தம் பெட்டியைக் காணவில்லை என்று தவிக்க, சிலர் நான்தான் அதை எடுத்ததாகக் கூற அவர் என்னுடன் சண்டைக்கு வந்துவிட்டார். கடைசியில் நாங்கள் இருவரும் ஒரு சைக்கிளை எடுத்துக் கொண்டு அந்த மூதாட்டி இறங்கிய இடத்திற்குச் சென்று பார்த்தபோது, நல்ல வேளையாகப் பெட்டி அங்கேயே இருந்தது. நானும் அடி வாங்காமல் தப்பினேன்!

— எம்.எஸ். ஸ்ரீனிவாசன்,
புதுக்கோட்டை.

### மனமிருந்தால் மார்க்கமுண்டு

வழக்கம் போல் ஒரு நாள் இரவு பதினொரு மணியளவில் எங்கள் தெரு முனையிலுள்ள டீக்கடையில உட்கார்ந்து நண்பர்களுடன் பேசிக் கொண்டிருந்தேன். அப்போது சுமார் எட்டு அல்லது ஒன்பது வயதுள்ள ஈழத் தமிழ் அகதிச் சிறுவன் ஒருவன் வந்து, "பசியாக இருக்கிறது. சாப்பிட ஏதாவது காசு கொடுங்கள்!" என்று கேட்டான். நண்பர்கள் அனைவரும் சேர்ந்து அவனுக்குச் சாப்பாடு வாங்கிக் கொடுத்துக் கையிலும் ஒரு சிறு தொகையைக் கொடுத்தனர். அன்று பார்த்து என்னிடம் ஐந்து பைசாக்கூட இல்லாமல் போனதே என்று வருத்தப்பட்டுக் கொண்டிருந்தபோது, அச்சிறுவனின் சட்டை கிழிந்திருப்பதைக் கண்டேன். உடனே எனது சட்டையைக் கழற்றி அவனிடம் கொடுத்துவிட்டு, பனியனுடன் நான் திருப்தியாக வீடு திரும்பினேன்!

— ஆர். கார்த்திகேயன், கரூர்.

### உதவியும் மறதியும்!

தெரிந்தவரிடம் நகரப் பஞ்சாயத்துக்குக் கட்ட வேண்டிய தண்ணீர் வரியை நான் கட்டி விடுகிறேன் என்று பணம் வாங்கிப் பையில் போட்டவன் மறந்தே போனேன். அதோடு அந்தப் பணம் எப்படி வந்தது என்று குழம்பியும் போனேன். பிறகு கஷ்டப்பட்டு நினைவுபடுத்திக் கொண்டு வரி கட்டச் சென்றபோது அதே தொகை அளவுக்கு அபராதத் தொகையையும் என் கையை விட்டுக் கட்டினேன்!

— கி. வசந்தகுமார், ஆறுமுகனேரி.

### இப்படியும் ஒரு பாராட்டு!

பக்கத்து வீட்டு ஏழைப் பையனுக்குத் தமக்குத் தெரிந்தவர் மூலம் என்ஜினியரிங் சீட் வாங்கிக் கொடுத்தும், பிறகு படிப்பு முடிந்ததும் நல்லதோர் வேலை வாங்கிக் கொடுத்தும் உதவிய என் கணவருக்குக் கிடைத்த பாராட்டு என்ன தெரியுமா? 'ஐந்து பெண்களைப் பெற்றிருக்கிறார். ஒன்றையாவது நம் பையன் தலையில் கட்டிவிடலாமென்றுதான் உதவி செய்கிறார்!' என்பதுதான். பையனின் பெற்றோர் இப்படிப் பேசியதை என் காதாலேயே கேட்டபோது, அடைந்த வேதனைக்கு அளவே இல்லை. நாங்கள் அப்போது டெல்லியிலிருந்ததால் ராக்கி பண்டிகை அன்று ராக்கி வாங்கி வந்து என் பெண்களை விட்டு அந்தப் பையன் கையில் கட்டச் சொன்ன பிறகுதான் என் மனம் நிம்மதியானது.

— திருமதி சுகந்தா ராமகிருஷ்ணன்,
சென்னை — 59.

### நான் பாதுகாக்கும் பரிசுகள்!

நான் மங்கநல்லூர் ரயில் நிலையத்தில் உதவி அதிகாரியாகப் பணியாற்றியபோது ஒரு நாள், ஓடும் ரயிலில் ஏற முயன்ற நரிக்குறவர் ஒருவர் கீழே விழுந்து மூர்ச்சையாகிவிட்டார். நான் அவருக்குச் சிகிச்சை அளித்து உதவினேன். பின் அவர் மயக்கம் தெளிந்து செல்லும்போது எப்படி நன்றி சொல்வது என்று தெரியாமல்—நான் எவ்வளவோ தடுத்தும் கேளாமல் தன்னிடமிருந்த மணி மாலை





# அனுபவம்

வாசகர் பங்கு

மற்றும் ஊசிகளை என் மேஜையின் மேல் வைத்துவிட்டுச் சென்றுவிட்டார். அந்த அன்புப் பொருள்களை இன்னமும் நான் பாதுகாத்து வருகிறேன்.

— கே. உப்பிலி, ASM.
மயிலாடுதுறை ஜங்ஷன்.

### உதவப்போய் அவஸ்தைப் படுகிறேன்

ஜாதி—மதம் வேறுயினும் தன் காதலி இல்லாமல் வாழ முடியாது என்று தேவதாஸாக அரற்றிய என் கல்லூரி நண்பனுக்கு முயற்சியெடுத்து என் சொந்தச் செலவில் அவன் காதலியையே திருமணம் செய்து வைத்தேன். அவனைவிட அவன் மனைவி நல்ல சம்பளத்தில் வேலை பார்ப்பதால், அழகானதொரு ஆண் குழந்தைக்குத் தந்தையான பிறகும், மனைவியோடு ஏற்படும் சிறுசிறு பிணக்குகளைக் கூடப் பெரிதுபடுத்துகிறான்; தான் தவறு செய்துவிட்டதாக அடிக்கடி கடிதம் எழுதுகிறான். அவன் பெற்றோரும் என்னைப் பார்க்கும் போதெல்லாம், "என் மகனைப் பள்ளத்தில் தள்ளிவிட்டீர்களே!" என்று புலம்பும் போது நான் படும் அவஸ்தை.... சொல்லி மாளாது.

— டி. கணேஷ், மதுரை—9.

### கடுகளவே ஆனாலும்.....

திருவனந்தபுரத்திலிருந்து நாகர்கோவில் செல்ல டோக்கன் வாங்கி ஏறியபோது, என் சீட்டில் ஒரு பெரியவர் உட்கார்ந்திருந்தார். கண்டக்டரோ, என் டோக்கனைப் பார்த்ததும் அப்பெரியவரை இறங்கும்படி சொல்ல, அவரோ தான் ஒரு நோயாளி என்று என்னிடம் கெஞ்ச, நான் இரக்கப்பட்டு இறங்கிவிட்டேன். பிறகு இரண்டரை மணி நேரம் பஸ் கிடைக்காமல் அவதிப்பட்டு நான் நாகர்கோவில் வந்தபோது கடைசி பஸ்ஸும் போய்விட்டதால், இருட்டில், தனிமையில் பதின்மூன்று கி. மீட்டர் நடக்க வேண்டியதாயிற்று. இருந்தாலும் ஒரு பெரியவருக்கு உதவிய நிம்மதி!

— எம். ஏ. ராஜ், திருவனந்தபுரம்—3.

### நல்லதுக்குக் காலமில்லை

என் ஒன்றுவிட்ட தாய் மாமன் மகள் செல்வி. 76—ஆம் ஆண்டின் எமர்ஜென்ஸி நேரம். பி. யு. சி. படிக்க விரும்பிய அவளுக்கு எங்கும் இடம் கிடைக்கவில்லை. அந்த நேரத்தில் நான் பெருமுயற்சி செய்து இன்று பாராளுமன்றத்தில் துணை சபாநாயகராக இருக்கும் தம்பிதுரை அவர்களின் உதவியோடு சென்னை செல்லம்மாள் கல்லூரியில் சேர்த்துவிட்டேன். பிறகு அவள் பி. யு. சி. யில் ஃபெயில் ஆனபோது, என் மாமா, "உன் கை ராசியால்தான் என் மகள் ஃபெயிலானாள்!" என்றார். நான் நிலைகுலைந்து போனேன்!

— செல்வியின் செல்வன், சென்னை—5.

### ஆபத்துக்கும் பாபம் உண்டு

ஒரு வியாழக்கிழமை தஞ்சாவூரிலுள்ள ஸ்ரீராகவேந்திர சுவாமிகள் கோயிலுக்குச் செல்லும் காட்டு வழியில் சென்று கொண்டிருக்கும் போது, எதிரே காலில் தைத்த கொத்து முள்ளோடு, பிராமண மூதாட்டி ஒருவர் தடுமாறிக் கொண்டிருந்தார். நான் இரக்கப்பட்டு அவரது காலைத் தொட்டு முள்ளை எடுக்கச் சென்ற போது அவர், "தொட்டுடாதே! தொட்டுடாதே!" என்று அலறியபடியே வேகமாகச் சென்று, ஓரமாக ஒதுங்கித் தாமே எடுத்துக் கொண்டார். அவரின் தீண்டாமை உணர்வை நினைத்து மிகவும் வருத்தமுற்றேன்.

சுடர்விழி, வடுகப்பட்டி.

### நல்லவேளை யாரும் இல்லை!

பாண்டிச்சேரி நீதி மன்றக் கட்டடத்திற்கருகில் மழைக்காக ஒதுங்கி நின்றபோது, சைக்கிளில் வந்த இளம் பெண் ஒருத்தி சறுக்கி விழுந்து, தடுமாறி எழுந்திருக்க, நான் ஓடிப் போய்ச் சைக்கிளை எடுத்து நிறுத்தி உதவினேன். அப்போது அவள், "எப்ப விழுவாள்னு அலையறது!" என்று முறைத்து விட்டுச் சென்றாள். நல்லவேளையாக யாரும் அருகில் இல்லை!

— ப. இராமமூர்த்தி, பாண்டிச்சேரி.









**உபத்திரவமான உதவி!**

இராசகோபால் தொழில் நுட்பக் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த காலம் அது. சக மாணவர்களும் நானும் தொழில் கூடத்திற்குச் சென்றபோது, சம்பந்தப்பட்ட ஆசிரியர் வராமல் போகவே, ஒரு மாணவர் விசைச் சுத்தியலை இயக்க, அதனால் இன்னொரு மாணவனின் கை அதில் பட்டு விடுமோ என்று பயந்து நான் அவன் கையை விலக்கச் சென்றபோது என் கை வேறு திசையிலிருந்த இயக்கத்தில் பட்டு என் விரல் வெட்டுப்பட்டு விட்டது. மறுநாள் முதல்வர் ஆசிரியரைத் திட்ட — ஆசிரியர் எங்களைத் திட்டி அனைவரையும் வெயிலில் நிற்க வைக்க — இவற்றோடு என் விரல் வெட்டுப்பட்ட வலியும் சேர்ந்து..... அப்பப்பா, இன்று நினைத்தாலும் மனசு வலிக்கிறது!

— கா. கோ. உமாபதி, சென்னை — 15.

**உதவப் போய் அழுதோம்!**

சென்ற ஜூலை மாதம், சென்னை வருவதற்காக ஜி. டி. எக்ஸ்பிரஸில் பயணமானோம். ரயில் புறப்படுவதற்குச் சில நிமிடங்கள் முன்பு ஓர் அம்மாள் எங்களிடம் இரண்டு அட்டைப் பெட்டிகளைக் கொடுத்து, ''உங்களுடையது ஏ.ஸி. கம்பார்ட்மெண்ட் என்பதால் இதை நீங்கள் வைத்திருங்கள். நான் சென்னையில் வந்து வாங்கிக் கொள்கிறேன்!'' என்று சொல்லவே நாங்களும் வாங்கி வைத்திருந்தோம். சிறிது நேரத்தில், எங்கள் கம்பார்ட்மெண்டிலுள்ளவர்களெல்லாம் அந்தப் பெட்டிகளில் வெடி குண்டுகள் இருக்கலாம் என்று சந்தேகத்தைக் கிளப்பி எங்களைத் திட்டவும் செய்யவே, எங்களுக்கு அழுகையே வந்துவிட்டது. கடைசியில் டிக்கெட் பரிசோதகர் துணையுடன் அவற்றைத் திறந்து பார்த்ததில் வெறும் ஸ்வீட்கள் தான் இருந்தன. நாங்களும் அமைதியானோம்!

— எஸ். மாயா, நியூடெல்லி — 16.

**நன்றியும் வசவும்!**

என்.எஸ்.எஸ். பொருட்டு மகாமகக் குளத்திற்குப் பணி செய்யச் சென்றிருந்த சமயம்! அங்கு குளித்துக் கொண்டிருந்த ஒரு பெண்ணின் புடவையை ஒரு பிச்சைக்காரப் பெண் களவாடிச் சென்றதைக் கண்ட நான், ஒரு போலீஸ்காரர் துணையோடு அந்தப் பெண்ணைப் பிடித்துப் புடவையைப் பெற்று வந்து உரியவளிடம் சேர்த்து நன்றியைப் பெற்றேன். ஆனால் என் தோழி, ''பணம் படைத்தவர்களின் ஒரு புடவை பறி போனால் பரவாயில்லை. கைக்குழந்தையுடன் இருந்த அந்தப் பிச்சைக்காரப் பெண்ணைப் போலீஸிடம் அடி வாங்க வைத்துவிட்டாயே!'' என்றாள்.

— வி. அருண்மொழி, கும்பகோணம்.

**கனவிலும் கிடைக்காத இடம்**

நான் அலையாய் அலைந்து, என் வீட்டுக் கருகில் உள்ள ஓர் அனாதைக் கிழவிக்கு அரசாங்க உதவிப் பணம் வாங்கித் தந்தேன். இதை அந்தக் கிழவியும், ஊராரும் பாராட்டியதோடு, அந்த உதவிக்கு நான் தான் காரணம் என்பதை அறிந்த தாசில்தார், தம் மகனுக்கு என் மகளை வரதட்சணை இன்றித் திருமணம் முடித்துக் கொண்டார். என் பெண்ணுக்குக் கனவிலும் கிடைக்காத அந்த இடம் எனது உதவியால் கிடைத்ததை என்னால் எப்போதும் மறக்க முடியாது.

— திருமதி ப்ரபா நாராயணன்,
கோவை — 29.

**துணிச்சலோடு உதவினேன்**

என் கணவர் பணிபுரியும் பேங்கில், பணிபுரியும் என் தோழிக்கு மறுநாள் சி.ஏ. ஐ.பி. தேர்வு. தேர்வுக்கான நுழைவுச் சீட்டை பேங்கிலேயே மறந்து வைத்துவிட்டு வந்துவிட்டாள். அன்று விடுமுறை; என் கணவரும் வெளியூர் சென்றுவிட்டார். அதிகாலையிலேயே அவளுடைய கலக்கமான குரலை போனில் கேட்டு, 'என்ன வந்தாலும் வரட்டும்' என்ற துணிவுடன் — படபடக்கும் நெஞ்சுடன் அவளோடு பேங்குக்குச் சென்று, பேங்கைத் திறந்து அவள் நுழைவுச் சீட்டை எடுக்க உதவினேன். அவள் கண்கலங்க நன்றி கூறியதோடு, என் கணவரும் என் உதவியைக் கண்டு மகிழ்ந்து பாராட்டியது மறக்க முடியாத நிகழ்ச்சி.

— திருமதி சுதா விசுவநாதன்,
பெங்களூர் — 3.

**தங்கை கொடுத்த டோஸ்!'**

பாலிடெக்னிக் படிக்கும் என் தங்கை

**ப்ளோப்ளாஸ்ட் வழங்கும் வி.ஐ.பி. ஸூட்கேஸைக் குலுக்கல் முறையில் பரிசாகப் பெறும் அதிர்ஷ்டசாலி:**

**டி. கணேஷ்,**
**25—ஏ, கிழக்கு மதுரை,**
**ஸ்டேஷன் ரோடு,**
**மதுரை—625 009.**



மகனுக்கு அறிவுரை கூறும்படி சொன்னாள் தங்கை. நானும், "நீ தற்போது படிக்கும் பாடங்கள் சற்று கடினமானதுதான். அதனால் பள்ளியில் இருந்தது போல் அலட்சியமாய் இல்லாமல் கவனமாகப் படி!" என்று கூறினேன். பிறகு நான் ஊருக்கு வந்த இரண்டே நாட்களில் என் தங்கை, "நீ சரியான ஆள் அண்ணா! அவன் ஏற்கெனவே பயந்திருந்தான். நீ பாலிடெக்னிக் பாடம் கடினம் என்றதும் இப்போது கல்லூரிக்கே போக மறுக்கிறான். இப்படியா அறிவுரை கூறுவது?" என்று கடிதத்தின் மூலம் டோஸ் விட்டிருந்தாள்.

— வி. பக்கிரிசாமி, லால்குடி.

### வாழ்க்கையே மாறியிருக்கும்!

பி. எஸ்ஸி இறுதித் தேர்வு. எனக்கு முன்னால் தேர்வு எழுதிக் கொண்டிருந்தவளின் விடைத் தாள் ஒன்று பறந்து வந்து என் காலடியில் விழ, நான் அதை எடுத்து அவளிடம் தர, இதைக் கவனித்த 'இன்விஜிலேட்டர்' நான் காப்பி அடிக்கிறேன் என்று சந்தேகப்பட்டு விசாரிக்க.... அரை மணி நேரம் வீணாய்ப் போனது. அந்த அரை மணியும் நான் தேர்வு எழுதியிருந்திருந்தால் பத்தே மதிப்பெண்களில் தவற விட்டுவிட்ட முதல் வகுப்பில் நான் தேர்ச்சி பெற்றிருப்பேன். என் வாழ்வின் மார்க்கமும் மாறிப் போயிருக்கும்.

— எஸ். மங்கையர்க்கரசி, மதுரை—1.

### கிடைத்தற்கரிய நட்பு

நான் கல்கத்தாவில் குடியிருந்த சமயம். ஒருநாள் பால்கனியில் நின்று கொண்டு வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தபோது, கீழே ஒரு பெண்மணி ஏதோ விலாசம் தேடுவது போல் இருக்கவே நான் இறங்கிச் சென்று உதவினேன். அதுவே ஆழ்ந்த நட்பாக மாறி அவர் தம் திருமணத்திற்கு என்னை அழைக்கும் அளவுக்கு வளர்ந்தது. ஆம்; அவர் திருமணத்திற்குச் சென்றிருந்தவர்கள் நான் உட்பட மொத்தம் ஏழே பேர்தான். அவர் யார் தெரியுமா? அகில உலகப் புகழ் பெற்ற கணித மேதை சகுந்தலா தேவிதான்!

— சாவித்திரி மணி, பம்பாய்—71.

### எதிர்பார்த்து ஏமாந்தேன்

அடுத்த ஊரிலிருக்கும் சிநேகிதியைப் பார்த்துவிட்டு வருவதாக அக்காவிடமும், அத்தானிடமும் கூறிச் சென்ற நான் பஸ் ஸ்ட்ரைக் காரணமாக... 

அடுத்த ஊரிலிருக்கும் சிநேகிதியைப் பார்த்துவிட்டு வருவதாக அக்காவிடமும், அத்தானிடமும் கூறிச் சென்ற நான் பஸ் ரிப்பேரால் வீடு திரும்ப வேண்டியதாயிற்று. என்னிடமிருந்த மாற்றுச் சாவியால் வீட்டைத் திறந்து, அவர்கள் அலுவலகத்திலிருந்து திரும்புவதற்குள் சுவையாகப் பொரியல், கூட்டுடன் சமைத்து வைத்திருந்தால் களைத்து வரும் அவர்கள் சந்தோஷப்படுவார்கள் என்று நினைத்துச் சமைத்துவிட்டுக் காத்திருந்தேன். நான்தான் ஊரில் இல்லையே என்ற நினைப்பில் அவர்கள் இருவரும் சினிமாவுக்குச் சென்றுவிட்டு, ஹோட்டலிலேயே சாப்பிட்டுவிட்டும் வந்துவிட்டார்கள். நான் சமைத்து வைத்திருப்பதைக் கண்ட என் அக்காளும் மிகவும் கஞ்சனான என் அத்தானும் 'அத்தனையும் வீணாகிப் போனதே' என்று ஆத்திரத்தோடு திட்டித் தீர்த்தார்கள். பாராட்டை எதிர்பார்த்த நான் அன்று வாங்கிக் கட்டிக் கொண்டதை மறக்கவே முடியாது.

— டி. உஷாஞானம், செல்லங்குப்பம் (கடலூர்)

### மேற்கோள் காட்டிப் புரிய வைத்தேன்:

எங்களூர் ஹரிஜனக் காலனி வீடுகள் தீப் பற்றி எரிந்தபோது, நான் தீயணைப்பு நிலையத்திற்கு போன் செய்து, நானும் சென்று தீயை அணைக்க உதவி ஹரிஜனங்களின் பாராட்டைப் பெற்றேன். அதே சமயம் வேதம் பயின்ற நான் ஹரிஜனக் காலனிக்குச் சென்றது தவறு என்று ஊராரிடம் வசவும் வாங்கினேன். பிறகு இதிகாச புராணங்களிலிருந்து தீண்டாமை ஒழிப்பை மேற்கோள் காட்டி ஊராரிடமும் பாராட்டுப் பெற்றேன்!

— ஆர். ரங்கராஜன், கங்காதரபுரம் (தஞ்சை)








# தீராத விளையாட்டு ஸாயி

17. இருவிதத்திலும் "ஹிட்"டாக

> திருவிளையாட் டிவையன்பு செய்து
> கேட்போர்......
> புண்ணியராய்ச் சிவனடிக்கீழ் நண்ணி
> வாழ்வார்.
>
> — திருவிளையாடற்புராணம்.

விளையாட்டாக பணிபுரிவதன் இன்பினையும் அன்பினையும் ஸாயி தாம் பெருக்குவது மட்டுமல்ல, தம் தொண்டர்களையும் அதிலே ஊறப் போடுகிறாரென்பதற்கு ஒரு ரம்யமான உதாஹரணம்:

ஸாயி நாதர் ப்ரசாந்தி மந்திரத்துக்கு முன் தென்னங்கன்றுகள் வைத்த காலம். அவற்றுக்கும் மற்ற பூச் செடிகளுக்கும் தண்ணீர் விட வேண்டும். அப்போது குழாய் போடவில்லை. எனவே கிழக்கே நூறு கெஜம் தள்ளியிருந்த ஆழமான பெரிய கிணற்றிலிருந்துதான், அதற்குள்ளேயே இறங்கி ஜலம் எடுத்துக் கொண்டு வந்து கொட்ட வேண்டியிருந்தது. இக்கடினப் பணியை லீலா ஸாயி எப்படி லளித விளையாட்டாக்கிக் கொடுத்தார், பாருங்கள்.

ப்ரசாந்தி நிலயவாஸிகளில் அந்தஸ்து வித்யாஸமின்றி, ஆண் பெண் வித்யாஸமின்றி அவ்வளவு பேரையும் பணியாளராக்கிக் கொண்டார் நமது ஸமதர்மர், ஸமப்ரேமர். கிணற்றின் நீர் மட்டத்திலும் கிணற்றுக்குள்ளேயே உள்ள மட்டங்களிலும் தொடங்கி, நில மட்டம், தென்னம் படுகை வரையிலுமாக அவர்களை 'க்யூ'வாக்கினார். கிணற்றிலிருந்து ஜலம் மொள்ளுபவரிலிருந்து நில மட்டத்தில் குடத்தைச் சேர்ப்பவர் வரையில் ஆளுக்கொன்று வருமளவுக்குக் குடங்கள் வாங்கிப் போட்டார். இவ்

ரா. கணபதி



''இந்தச் சிற்பத்தைக் குடைந்தெடுக்க இப்படி ஒரு கடினமான பாறையை எப்படித்தான் தேர்ந்தெடுத்தாரோ இந்தச் சிற்பி என்று வெளிநாட்டு நிபுணர்களெல்லாம் மூக்கின்மேல் விரலை வைக்கிறார்கள்...''

''அப்படி என்ன பாறை அது?''

''பாறையே இல்லையாம் அது... சிற்பியோட மனைவி செய்த மைசூர் பாகில் ஒரு பெரிய கட்டியை எடுத்துக் குடைந்து அந்தச் சிற்பத்தைச் செய்தாராம்!''

—என். எஸ். வி. குருமூர்த்தி.

வாறு கிணற்றிலிறங்கி ஜலம் எடுப்பது முதல் நில மட்டத்தில் குடத்தைச் சேர்ப்பதுவரை செய்து முடிக்கும் க்யூவின் பகுதி முழுதிலும் ஆண்களைப் போட்டார். குடம் நிலம் தொட்ட இடத்திலிருந்து தென்னங்கன்று வரையுள்ள பகுதியில் பெண்களைப் போட்டார். இந்த க்யூவுக்கு எதிர் வரிசையாக இதே போல் ஆண் பெண் கொண்ட இன்னொரு க்யூ. இதிலுள்ள யாவரும் வயஸானவர்கள். கை கையாகக் குடங்கள் மாறி, கிணற்றில் நீர் எடுக்கும் ஆண்களில் ஆரம்பித்து, கன்றுகளுக்கு அதை வார்க்கும் பெண்கள் வரை போகும். அப்புறம் நீர் கொட்டிக் காலியான குடம் எதிர் க்யூவிலுள்ள வயஸானவர்களின் கை கையாகச் சென்று கிணற்றை அடையும்.

பக்வான் ஒட்டுறவோடு எதிர்நின்று இயக்க, இப்படி இவர்கள் கூடிப் பணி செய்ததே வேலைப் பளுவை குறைத்து அதில் ஓர் இன்பம் காணச் செய்தது எனில், இன்பத்தைக் 'குஷி' என்னும்படியே அவர் அதிகம் ஆக்கினார். ''புருஷர்களா, ஸ்த்ரீகளா யார் ஜெயிக்கிறார்கள் பார்ப்போம். ஜயிக்கிற கோஷ்டிக்கு ப்ரைஸ்'' என்று சொல்லிப் பந்தயம் வைத்தார். பெண்கள் கடைசிக் குடத்தைக் காலி செய்வதற்குள், கிணற்றின் முடிவில் நிலத்தைத் தொட்டுக் கொண்டிருக்கும் ஆணிடம் முதல் குடம் மீண்டும் வரா விட்டால் பெண்களை விட ஆண்கள் 'ஸ்லோ' என்று அர்த்தம். பெண்கள் ப்ரைஸை அடித்துக் கொண்டு போவார்கள். மாறாக அந்த முதல் குடம் அடுத்த சுற்றில் அந்தக் கிணற்று முடிவு ஆசாமிக்கு வந்தபோது இங்கே தென்னங்கன்றுக்கு முன் சுற்றின் கடைசிக் குட ஜலம் வார்க்கப்படாவிட்டால் ஆண்களுக்கு அதிருஷ்டப் பரிசு!

எப்பேர்ப்பட்ட பரிசு! ஸ்வாமி திருக்கையால் ஆகாயத்தை ஒரு வழிப்பு வழிப்பார். அக்கையில் பெண்கள் கோஷ்டி, ஆண்கள் கோஷ்டியில் எது ஜயிக்கிறதோ அதில் தலைக்கு ஒன்று கொடுக்கும்படியாக, சற்றும் கணக்குத் தப்பாமல் வெள்ளிச் சில்லுகள் வரும்! அவற்றில் 'ஓம்' என்ற சின்னமோ, ஷிர்டி ப்பாபா உருவமோ, அல்லது நம் பர்த்திபாபாவின் உருவமேயோ பொறித்திருக்கும்.

ஸாயிராம் பஜனையும். அந்த ஸாயிராமே மேற்பார்த்துச் செய்யும் கிண்டலும் தமாஷுமாக இப்படியாகத்தானே கடும் உழைப்பே களிப்பு விளையாட்டாயிற்று.

ஒருசின்னஞ்சிறுபயல் கூட அகத்திலிருந்த கங்கைச் செம்பை எடுத்து வந்து கிணற்றிலிறங்கி, நீர் எடுத்தான். அவனைவிடக் குழந்தையாய் ஸாயித்தாய் அதில் குதூஹலித்தாள். ''பயலே! ஜமாய்! காசிச் சொம்பில் புட்டபர்த்தி ஜலம்? ம்?'' என்றார். இது ப்ரேம கங்கை.

குழந்தை ஸாமி ஒரு குடத்தைத் திருப்பிப் போட்டுக் கொண்டு அதன் மீது அமர்ந்தது! அந்தப் பயலைத் தூக்கி மடியில் வைத்துக் கொண்டது. மற்ற சிறுவர்களையும் தன்னடையில் வண்டுகளாகத் தன்னை ஒட்டி நிறுத்திக் கொண்டது. பணி செய்த அத்தனை நிலய வாஸிகளையும் ''வாங்கோ, வாங்கோ'' என்று தன்னோடு க்ரூப் ஃபோட்டோவுக்குக் கூப்பிட்டு நிறுத்திக்கொண்டது. ப்ரேமக்கரிசனத்தோடு அதில் ஒருவர்கூட ஃபோட்டோவில் மறையாமல் தெரியும்படி நிறுத்தி வைத்துக் கொண்டு, கஸ்தூரியை 'க்ளிக்'கச் சொல்லிற்று!

அற்புத ஸாமி இப்படி அன்பு விளையாடுவதை உலகம் அறியுமோ?

அப்புறம் அவர் அற்புதமே இல்லாத ஸாயியானதையும் பாருங்கள்! அவர் இத்தனை முனைப்புக் காட்டிக் கஸ்தூரி எடுத்த அந்த ஃபோட்டோ விழவேயில்லை!

என்றோ கர்த்துடன் உதகையில் தாம் இருந்ததை அப்புறம் எப்போதோ, எங்கோ விமானத்துக்குள் அவர் ஃபோட்டோவாக்கித் தந்ததை முன்பு பார்த்தோம். இப்போதும் இச்சா மாத்திரத்தில் அப்படி க்ரூப் ஃபோட்டோ ஸ்ருஷ்டித்துத்தந்திருக்கக்கூடியவர்தான். ஆயினும் காமிரா கொண்டு எடுத்த படமே பதிவாகாத போது, ''ஓ! அப்படியா?'' என்று வெறுமே சிரித்து அதை ஏற்றுக் கொள்ளத்தான் செய்தாரேயன்றி மாற்றி அற்புதம் புரியவில்லை.

யாருக்கு, எப்போது, எதற்காக அற்புதம் புரிய வேண்டுமோ அப்போதுதான் செய்

* தொடரில் வெளியான புகைப்படங்களில் பல எடுத்தோ, கொடுத்தோ உதவியவர்: ஆர். பத்மநாபன்

வார். தமக்கு அத்புத சக்தி உள்ளதென்பதற்காக "இயற்கையன்னை ஒழுங்காகச் சமையல் செய்து கொண்டிருக்கும் அடுக்களையில் தாம் அடிக்கடி குறுக்கிட விரும்பவில்லை" என்ற அவரது மணி மொழி உன்னி உன்னி ரஸிக்க வேண்டியதாகும்.

'லைட்' டாக வாழ்ந்து வாழ்க்கையை விளையாட்டாக ரஸியுங்கள் என்பவர் தமது அத்புதத்தையும் 'லைட்' டாகவே எடுத்துக் கொள்ளச் சொல்கிறார். "விக்நேச்வரர் பெருமை என்ன? ஒரு யானை அத்தனை கனமாயிருந்தாலும் எளிதாய் நீந்தி விளையாடும். அதாவது தன்னை அவ்வளவு 'லைட்' ஆக்கிக் கொள்கிறது. தம்முடைய கனத்தையும் லேசாகக் கொண்டிருக்கும் மஹாபாவத்தையே கஜமுகர் காட்டுகிறார்" என்பார்.

இதோ நிலைவு வருகிறது! ஆரம்ப அத்யாயத்தில், கொந்தளிப்புக் கடலிடையே கமலமலருள் அமர்ந்த லேசுப்பிள்ளையாரைப் (அவர் லேசுப்பட்டவரும் அல்லதான்!) பார்த்து ஒரு ஸஸ்பென்ஸ் வைத்தோமே! கோலாலம்பூர் ஜகதீசனுக்குப் பார்ஸலில் வந்த அந்த விநாயகர் சித்ரத்தை அனுப்பியது யார் என்பதுதானே ஸஸ்பென்ஸ்? ஜகதீசன் நினைத்தாற் போலவோ, நீங்களும் நினைக்கிறாற் போலவோ, இங்கேயும் ஸாயியற்புதம் எதுவும் நிகழ்ந்து விடவில்லை. ஜகதீசனின் பெங்களூர் நண்பர் ஒருவர்தாம் தமக்குத் தெரிந்த ஓவியரிடம் இவருக்கு ஏதேனும் படம் அனுப்பச் சொல்ல, ஓவியர் இந்தப் படத்தை அனுப்பியிருந்தார்! விசேஷமாக எந்தக் காரணமும் இன்றி அந்த ஓவியர் தம் முகவரியைப் பார்ஸலில் குறிப்பிடாதிருந்து விட்டார்! அதுதான் ஸ்வாமியே அற்புத முறையில் அப்படத்தை அனுப்பிவிட்டாரோ என்று எண்ணச் செய்துவிட்டது!

இப்படி ஏமாற்றுவதும் அவர் திருவிளையாட்டில் ஓர் முக்யமான அங்கம். ஏன்? ஏமாற்றத்தையும் நாம் 'லைட்' டாக எடுத்துக் கொள்ள வேண்டும் என்று பயில்விக்கவே!

'லைட்' டாக லைஃபை வாழுங்கள்' என்ற அவரது ஓர் உபதேசத்தை நாம் பின்பற்றிவிட்டால் அப்புறம் நிம்மதி, நிர்விசாரம்தான். இருவிதத்திலும் 'லைட்' டாக இருக்க வழி காட்டுகிறார்! லேசாயுள்ள 'லைட்'; ஒளியூட்டும் 'லைட்'. என்ன ஒளி? அன்பொளிதான்!

அன்பொளியால் அவர் வழி காட்டவே, **"Lead, Kindly Light,"** என வேண்டுவது.

அற்புதமாய் அவர் ஒளி காட்டிய ஒன்று மாத்திரம் கூறி, **"Sweet seventeen"** என்பதற்கேற்ப, இனியனின் லீலைத் தொடரை இந்தப் பதினேழாம் அத்யாயத்துடன், அவரது மணி விழாவின் ஆரம்பமணியோசையில் கரைத்து விடலாம்!

ஐஸ்க்ரீமாக இனிக்கும் ஸ்வாமி ஒய்ட்ஃபீல்டில் உள்ள ஒரு ப்ரபல ஐஸ்க்ரீம் உற்பத்தி சாலைக்குச் சென்றார். அதனுள் ஒவ்வோர் அறையாய் அவர் செல்கையில் இருட்கிடங்குள்ளும் ப்ரவேசித்தார். முதலாளி முதலானோர் அலறிப் புடைத்துக் கொண்டு டார்ச்சுக்கு ஓட, எப்போதும் பதைப்புறாமல், 'லைட்' டாக இருக்கும் ஸ்வாமி அலர்ந்து சிரித்தார். 'லைட்' சிரிப்பினால் வாஸ்தவமாகவே அந்த இருட் கிடங்கை ஒளி வெள்ளத்தில் முழுகடித்தார்.

ப்ரேம ஜ்யோதி! எங்கள் இருள் இதயங்களில் இன்று போல் என்றும் ஒளி பாய்ச்சி எங்களையும் ஒளிமயமாக்கி இன்புறுத்துவாய்!

பண்டவன் செய்த கிரீடை யெல்லாம்
கொண்டிவை பாடிக் குனிக்க வல்லார்
எண்டிசைக்கும் விளக்காகி நிற்பார்!
(பெரியாழ்வார்)

**ஜெய் ஸாயிராம்!**



# சாதனையைப் பார்த்து வைத்தால்...

இவன் சிறைத் தண்டனையை அனுபவித்தது நிஜம். ஆனால் தியாகியோ, அரசியல்வாதியோ அல்ல. கொஞ்சம் முன்கோபக்காரன். கேட்கக் கூடாதது எதையாவது கேட்டுவிட்டால் கண்மண் தெரியாமல் கோபம் வரும். அப்போதைய இவன் செயல்கள் கட்டுப்பாட்டை மீறிவிடும். அந்தக் கோபம்தான் 'கொலைகாரன்' என்ற பட்டத்தையும் இவனுக்குத் தேடித் தந்தது.

நடுத் தெருவில் குடிகாரன் ஒருவன் தன் மனைவியை இழுத்துப் போட்டு அடித்து, பல கண்களுக்கு முன்னால் அலங்கோலப்படுத்திக் கொண்டிருந்ததைக் காணப் பொறுக்காமல் அவனிடம் நியாயம் சொல்லப் போனான்.

''எம் பொஞ்சாதிய நா அடிப்பேன்... ஒதைப்பேன்... நீ யாருய்யா கேட்கிறதுக்கு... இவளை நீ வச்சுக்கிட்டிருக்கியா?'' என்று அந்தக் குடிகாரன் இவனை எதிர்த்துக் கேட்டதுதான் தெரியும். உலகத்துக் கோபங்கள் அத்தனையும் ஒன்று சேர்ந்து இவனது மூக்கின் மேல் பிரசன்னமாயின. ஆத்திரத்தோடு அந்தக்குடிகாரனைப்பிடரியில்ஓங்கிஅறைந்து விட்டான். அவ்வளவுதான். அடுத்த வார்த்தை பேச முடியாமல் குடிகாரனின் ஆவி அந்த இடத்திலேயே பிரிந்துபோனது!

கூடியிருந்த வாய்கள் அத்தனையும், ''கொலை பண்ணிட்டான்... கொலை பண்ணிட்டான்!'' என்று கத்த ஆரம்பிக்க — இதுவரை அடிவாங்கியவலியில்துடித்துக்கொண்டிருந்த குடிகாரன் மனைவி, ''ஐயோ பாவி, எம்புருஷனைக் கொன்னுட்டியே... எம்பூவையும் பொட்டையும் பறிச்சிட்டியே?'' என்று வெறித்தனமாய்க் கத்தியபடியே இவனது சட்டையைப் பிடித்து உலுக்க, நிலைமையை அப்போதுதான் உணர்ந்தான்.

மனத்தில் கிலி பரவ, அவளது கையை உதறித் தள்ளிவிட்டுக் கூட்டத்தைக் கிழித்துக் கொண்டு வீட்டுக்கு ஓடி வந்தான். கூட்டமும் தொடர்ந்து வந்தது!

அம்மா, அப்பா, அண்ணன், தங்கை — அனைவரும் பதற்றத்தில் இவனிடம் என்னென்னவோ கேள்விகள் கேட்க — ''எங்காவது ஓடிப் போய்க் கொஞ்ச நாளைக்குத் தலைமறைவாயிரேன்!'' என்று அடுத்த வீட்டுக்காரர் அறிவுரை கொடுக்க — அவை எதுவுமே காதில் விழாத கற்சிலையாக நின்றான். அரை மணி நேரத்திற்குள் கஞ்சி போட்ட காக்கி சட்டைகள் இவனைக் கைது செய்ய வந்தன. தெருவே கூடி நின்று வேடிக்கை பார்க்கக் கையில் விலங்கோடு பிணமாய் நடந்தான்.

கோர்ட் — கேஸ் — வக்கீல் — வாதங்கள் என்று பல மாதங்கள் கழிந்து முடிந்த போது, ஏழு வருடங்கள் கடுங்காவல் சிறைத் தண்டனை கொடுத்துநீதிபதிதீர்ப்பெழுதிவிட, நீதிதேவன் கண்களைப் பொத்திக் கொண்டு வேடிக்கை பார்த்தான்.

அந்த வருடங்கள் இவனது வாழ்க்கையின் இருண்ட காண்டமாகக் கழிந்துவிட இன்றுதான் விடுதலையானான். சுதந்திரச் சூரியனை அண்ணாந்து பார்த்துத் தாடியடர்ந்திருந்த தாடையைச் சொறிந்து கொண்ட போது, 'எங்கே செல்வது?' என்ற யோசனை வர ஸ்தம்பித்துப் போனான்!

இவன் சிறையிலிருந்த நாட்களில் உறவென்று சொல்லிக் கொண்டு ஒருவர் கூட இவனைப் பார்க்க வராததாலும், இவன் போட்ட கடிதங்கள் அத்தனையும் மௌனம் அனுஷ்டித்ததாலுமே இப்படியொரு கேள்வி இவன் மனத்தில் முளைத்தது. மறுகணம், 'வீட்டுக்குச் சென்று என்னதான் நடக்கிறதென்று பாரேன்!' என்று உள்மனம் சோதிக்கச் சொன்னது. பாசம் படையெடுத்தது.

கால்கள் வீட்டை நோக்கி நடந்தன. நெஞ்சில் கார்ப்பண்யம் சூழ்ந்து கொண்டது!

இவன் தெருவுக்குள் நுழைந்த போதே குடத்தோடு எதிர்ப்பட்ட இந்துவை அடையாளம் கண்டு கொண்டான். உணர்ச்சிகள் மேலிட, ''தங்கச்சி!'' என்று கூவினான். அடுத்த கணமே அவள் பேயைக் கண்டது போல் விதிர்த்திட்டுத் தண்ணீர் கூட எடுக்காமல் வெற்றுக் குடத்தோடு வீட்டுக்குத் தலை தெறிக்க ஓடினாள்!

இவன் வீட்டுப் படியை மிதித்தபோது மயானக்கரை போல் அமைதி மண்டிக்

கிடக்க — அண்ணன் தினகரன் ஒருபுறமும் அப்பா ஒருபுறமும் விறைத்து நின்று மோட்டு வளையை முறைத்திருக்க — இந்து கைகளைப் பிசைந்து மிடறு விழுங்கி வியர்த்தாள். ஏழு வருட இடைவெளி அவள் உடலில் மட்டு மின்றி மனத்திலும் சில மாற்றங்களைச் செய் திருப்பதை இவன் உணர்ந்து கொண்டான்.

"தங்கச்சி, எப்படிம்மா இருக்கே?" என்று கேட்கப் போன இவன் வார்த்தைகள் தொண்டை வரை வந்து கரைந்து போயின. நிமிடங்கள் மௌனத்தில் கரைய, நேசத்துக்காக ஏங்கிக் கிடந்த இவன் நெஞ்சம் கனத்துப் போனது. கனிவான பார்வைக்காகத் தவம் கிடந்த இவன் கண்கள் ஈரக் கசி வெடுத்தன. உடனே அம்மாவின் நினைவு வந்தது — 'அவள் எங்கே... என்னைப் பார்க்கக் கூடப் பிடிக்காமல் தன்னை ஒளித்துக் கொண்டாளோ! கூடாது... அந்தப் புனித நெஞ்சிலாவது நான் குற்றவாளியில்லை என்பதை நிரூபித்தாக வேண்டும்!'

"அம்மா, எங்கே?" என்று கேட்க நினைத்தான். உதடுகள் பிரிய மறுத்தன.



லக்கேஜ் பெட்டித் தயாரிப்புத்
தலைவர்களின் படைப்பு—

# வி.ஐ.பி.

# கன்கார்டு

வந்திறங்குது இப்போது—

இதோ, ஜெட் யுகக் கட்டழகுக்குள் புதிய விஐபி கன்கார்டு! நாகரீக நரம்போடிய அலாதி ஸ்டைலிங். கண்டறியாத வர்ண வகைகள்: பீச் க்ரீம் (செவ்வின மஞ்சள்), டெஸர்ட் பிரவுன் (மணற் கபில நிறம்), மிஸ்ட் க்ரே (பனிச் சாம்பல்), க்ரீம் சாக்கலேட், மேலும் பலப் பல. உட்புறமோ இடவசதி மிகுதி.

ஓடோடிப் பார்வையிடுவீர்: அருகிலுள்ள வியாபாரியிடம்... சொகுசு லக்கேஜ் புதுவரவுகள்.

## ஆகாயமெட்டும் எங்கள் அதிநவீனக் கற்பனை.




**தேர்ந்தெடுக்க மிகப் பல வகைகள்,
வருங்கால யோக வரவுகளோ மேலும் பலப்பல.**

LINTAS VIP M 10 2013 TM

இவன் அடுத்த அடியெடுத்து வைத்த போது, "அங்கேயே நில்லுடா... உள்ளே வரக் கூடாது... ஜெயில்லேர்ந்து அப்படியே எங்காவது தொலைஞ்சிடுவேன்னு நெனைச்சேன்... இங்க ஏண்டா வந்தே?" — நெடுநேர ஆலோசனைக்குப் பின் அப்பா உதிர்த்த இந்த வார்த்தைகள் சாட்டையடியாய் இவன் மனத்தில் அறைந்தன.

இவனுக்குப் பேச்சு வரவில்லை. வறண்ட கன்னங்களைக் கண்கள் ஈரப்படுத்தின.

"ராஜா, உன்னைத்தாண்டா கேட்கிறேன்... இந்த விட்டு வாசற்படியை மிதிக்க உனக்கு என்ன அருகதையிருக்கு?"

"அப்பா நான் உங்க பிள்ளைப்பா!" — இதை உச்சரிப்பதற்காகப் பல நாட்கள் ஏங்கிக் கிடந்த இவன் உதடுகள் வெடித்துத் துடித்தன!

"என்னை நீ அப்பான்னு கூப்பிடாதே... எனக்கு ஒரு மகன் — ஒரு மகள்தான். என்னிக்கு நீ ஒரு கொலையைப் பண்ணிட்டு ஜெயிலுக்குப் போனியோ அன்னிக்கே எனக்கிருந்த ரெண்டாவது மகன் செத்திட்டான். உன்னாலெ நம்ம குடும்பத்துக்கு எவ்வளவு கெட்ட பேரு தெரியுமா... மரியாதையா வெளியே போய்டு!"

"அண்ணே! அப்பாதான் தெரியாமப் பேசறாரு. படிச்ச உனக்குக் கூடவா புரியலே? அது யதார்த்தமா நடந்த அசம்பாவிதம்தான்னு அப்பாகிட்டே சொல்லுண்ணே?" என்றிவன் தினகரனைக் கெஞ்சினான். தோளைப் பிடித்திருந்த இவனை உதறித் தள்ளிவிட்டு அவன் விலகிச் சென்றான்...

"ராஜா, ஒரு பைசா திருடினாலும் திருடன் தான். ஒரு லட்சம் திருடினாலும் திருடன் தான். நீ ஜெயிலுக்குப் போனதுக்கு அப்புறம் என்னாலெ தெருவிலெ தலை நிமிர்ந்து நடக்க முடியலடா. ஆபீஸில் எனக்குக் கிடைக்க இருந்த 'ப்ரமோஷன்' கூட உன்னாலெ கெட்டுப் போச்சு. ஒரு கொலைகாரனோட அண்ணன்னு எம்மேலெ 'ப்ளாக் மார்க்' விழுந்திருச்சி. உயிர் நண்பர்கள் கூட என்னை விட்டு விலகிப் போய்ட்டாங்க. உன்னாலெ நாங்க பட்ட அவஸ்தை போதும்... செலவுக்குப் பணம் தர்றேன்... எங்க கண்ணிலபடாமல் எங்காவது தொலைவாப்போய்டேன்!" — என்று இவனைப் பார்க்கக் கூடப் பிடிக்காமல் முகம் திருப்பிப் பேசினான்.

இவனது நெஞ்சம் வெடிக்கக் கண்ணீர் பெருக்கெடுத்தது. இந்துவை நெருங்கினான். "தங்கச்சி, நீயாவது என்னைப் புரிஞ்சுக்கம்மா. அன்னிக்கு நான் அவனை வேணுமுன்னு அடிக்கலம்மா. அவன் என்னைத் தரக் குறைவாப் பேசினான். கோபத்துல ஒரே ஒரு அடிதான் அடிச்சேன். அதுலயே அவன் செத்திடுவான்னு எனக்குத் தெரியாதும்மா!"

"ராஜாண்ணா, நீ பண்ணின கொலையைச் சர்வ சாதாரணமாச் சொல்லிட்டே. ஆனா அதனாலெ ஏற்பட்ட பின் விளைவுகள் உனக்குத் தெரியாது... என்னைப் பெண் பார்க்க வந்தவங்கள்ளாம் உன்னைப் பற்றிக் கேள்விப்பட்



# கர்நாடக இசையும் நானும்

**போட்டி: 30**

சென்னையில் இசைவிழா சீக்கிரமே ஆரம்பிக்க இருக்கிறது. திரும்பிய பக்கமெல்லாம் கச்சேரியாக இருக்கும். "நான் ஏன் கர்நாடக இசை கேட்கிறேன்" அல்லது "நான் ஏன் கர்நாடக இசை கேட்பதில்லை" என்ற தலைப்பில் கேலியுள்ள வெற்றிடத்தில் ரசமான விதத்தில் எழுதி இந்த அரைப் பக்கத்தை முழுமையாக எங்களுக்குக் கத்தரித்து அனுப்புங்கள். பிரசுரமானால் பரிசு; தவிர குலுக்கல் முறையில் ஒருவருக்கு வி.ஐ.பி. ஸூட்கேஸ். உறையின் மீது 'கர்நாடக இசையும் நானும்' என்று தவறாமல் குறிப்பிடவும்.

**முடிவு தேதி: 4.12.85**

வாரந்தோறும் போட்டிகளில் பங்கேற்றுக்கொள்ளுங்கள். இன்னும் 23 வி.ஐ.பி. ஸூட்கேஸ்கள் உள்ளன. அவற்றுள் ஒன்றேனும் உங்களுக்குக் கிடைக்காமலா போகும்!

என் பெயர்: ....................................................

விலாசம்: ....................................................

....................................................

## வி.ஐ.பி. ஸூட்கேஸ் பரிசுத் திட்டம்

டதும் நம்ம அப்பாவை எப்படியெல்லாம் எடுத்தெறிஞ்சு பேசினாங்க தெரியுமா? நீ இங்கேயே தங்கிட்டா வாழ்நாள் பூரா நா நித்திய கன்னியாவே இருந்திட வேண்டியதுதான்!" — என்ற இந்து கதறினாள்.

இவன் வாயடைத்து நின்றான் — 'இவ்வளவு நடந்தும் அம்மா வெளியே வரவில்லையே... அவள் மனமும் கல்லாகிவிட்டதா?'

"இன்னும் ஏண்டா நிக்கிறே? அதான் எல்லாரும் உன்னைப் போகச் சொல்லியாச்சே?" — அப்பா அலறினார்.

"போய்டறேம்ப்பா... போறதுக்கு முன்னால அம்மா முகத்தை ஒரே ஒரு தடவை பார்த்திட்டுப் போய்டறேன் கூப்பிடுங்கப்பா!"

"அடப்பாவி, ஏண்டா எங்க வயித்தெரிச்சலைக் கொட்டிக்கறே... நீதான் அவளுக்கு எமனாயிட்டியே! நீ ஜெயிலுக்குப் போன துக்கம் தாங்காம அவதான் அன்னிக்கே எங்களை விட்டுப் போய்ட்டாளேடா!" — அப்பாவும் குலுங்கிக் குலுங்கி அழுதார்.

அவர் சொல்லியதைக் கேட்டதும், "அம்மா.. ஆ...ஆ...!" என்று அலறியபடியே அண்ணாந்த இவன் கண்களில் மாலையிட்ட புகைப்படமாய்ச் சிரித்த அம்மா அப்போதுதான் தெரிந்தாள். ஒரு கணம் அந்த போட்டோவையே வெறித்தான் — 'நீயும், என்னைக் கொலைகாரன்னு நம்பிட்டியாம்மா? பத்து மாசம் வயிற்றில் சுமந்த உனக்குமா உன் பிள்ளையைப் புரிஞ்சுக்க முடியல்லே. நா வரேம்மா. இனிமே வாழ்க்கையில் எனக்கு என்ன இருக்கு?" என்று புலம்பியவன் வீட்டைவிட்டு வெளியேறி விரக்தியாய் நடந்தான்.

விஷயம் விஷமாய்ப் பரவி, தெரு நெடுகப் பல தலைகள் இவனைக் கரித்துக் கொட்டியது காதில் விழுந்தது. தெரு முனைக்குச் சென்று திரும்பிய போதுதான் அவள் கண்ணில் பட்டாள்!

அவள் — இவன் கொலை செய்த குடிகாரனின் மனைவி!

இன்னும் இளமைமாறாதிருந்தாள். ஆனால் பூவோடும், பொட்டோடும் அவளைக் கண்டதும் இவன் நெஞ்சில் இடறியது. எனினும் அவளைப் பார்க்காதது போல் கடந்து செல்ல இவன் முற்பட்டபோது,

"தம்பி, கொஞ்சம் நில்லுங்க. இன்னிக்குத்தான் ஜெயில்லேர்ந்து வந்தீங்களா? என்னை உங்களுக்குத் தெரியுதா?" — என்று அவளே வலிய வந்து இவனை நிறுத்திவிட்டாள்.

பேச்சு வராது, ஒரு க்ஷணம் அவளை ஏறிட்டுப் பார்த்துவிட்டுத் தலைகவிழ்ந்தான்.

"என்ன தம்பி அப்படிப் பார்க்கிறீங்க? என்னடா, புருஷன் செத்ததுக்கு அப்புறமும் பூவோடும், பொட்டோடும் இருக்காளேன்னு பார்க்கிறீங்களா? எங்கள்ல அறுத்துக் கட்ற பழக்கமுண்டு தம்பி! எங்க சாதி — சனமெல்லாம் சேர்ந்து எனக்கு ரெண்டாங் கல்யாணம் பண்ணி வச்சிட்டாங்க. ஆமா, உங்க முகம் ஏன் வாட்டமாயிருக்கு...? எங்க போறீங்க?"

பாலையாய் வறண்டு வெடித்த நெஞ்சில் அவள் வார்த்தைகள் பால் மழையாய்ப் பொழிய, அழுத கண்களோடும், நிறைந்த நெஞ்சோடும் அவளைப் பார்த்தான்!



# தண்டிக்கப்படும் நியாயங்கள்

"காம்ரெட்ஸ்!

நாமெல்லாம் இங்கே ஏன் கூடியிருக்கிறோம் என்று உங்களுக்குத் தெரியும் என நினைக்கிறேன். நம் புது மானேஜர், வங்கித் துறைக்கே புதியவர்; இளைஞர்; இன்னும் அடிபடாதவர். அவருக்கு நம் அசுர பலம் தெரிந்திருக்க நியாயமில்லை. அதனால்தான் நம்மிடம் மோதிப் பார்க்கிறார். அதிகாரத்தால் நம்மை யாரும் பணிய வைக்க முடியாது. நம்மிடம் 'ரிக்வஸ்ட்' செய்து கொண்டால், போனால் போகிறது என்று விட்டுக்கொடுத்து வேலைகளைச் செய்யலாம். அவரோ சட்டம் பேசுகிறார். டிஸிப்ளின், டிஸிப்ளின் என்று நம்மை மிரட்டப் பார்க்கிறார். நம் அடிப்படை உரிமைகளை மறுக்கிறார். இவருக்குச் சரியான படி பாடம் புகட்ட வேண்டிய கடமை நம்மை எதிர்நோக்கியுள்ளது. முதலில் நாம் யார், நம்முடைய பலம் என்ன என்பதை அவருக்கு உணர்த்தியாக வேண்டும். அதற்காக நாம் இப்போது எடுக்கப் போகும் முடிவுகளைக் கேட்டே அவர் நடுங்க வேண்டும். முதலில் பழனி அவர்கள், மானேஜர் எப்படி ஆணவத்துடன், அதிகார வெறியுடன், எதேச்சாதிகாரமாக நடந்து கொள்கிறார் என்பதை விளக்கிப் பேசுவார்."

என முழங்கி அமர்ந்தான் யூசுப்; யூனியன் பிரதிநிதி.

பிரதீப் ஒன்றும் புரியாமல் விழித்தான். அவன் அந்த வங்கியில் சேர்ந்து இரண்டு மாதங்களே ஆகியிருந்தன. அவன் பார்த்த வரை மானேஜர் நல்ல மாதிரிதான். யாரிடமும் கடிந்து பேசியதில்லை. அவன் வேலைக்குச் சேர்ந்த அன்று, அவனைத் தம் அறையில் அழைத்து, அன்பாகப் பேசியவை இன்றும் அவன் நினைவில் இருந்தன.

"தம்பி, நீங்கள் இன்று புதிதாகச் சேர்ந்திருக்கிறீர்கள். நம் கிளையின் முன்னேற்றத்துக்காக நாமெல்லாம் கடுமையாக உழைக்க வேண்டிய நேரமிது. இந்தக் கிளை தொடர்ந்து பத்து ஆண்டுகளாக நஷ்டத்தில் ஓடிக்கொண்டிருக்கிறது. டெபாஸிட் இலக்கை நாம் இன்னும் அடையவில்லை. இந்நிலையை மாற்றி அமைக்க வேண்டும். அது உங்கள் எல்லோருடைய ஒத்துழைப்பில்தான் இருக்கிறது. அதற்காக யாரும் இரவு பகலாக உழைக்க வேண்டுமென்பதில்லை. சரியான நேரத்திற்கு வந்து, வாடிக்கையாளர் மனம் நோகாமல் நடந்து கொண்டாலே போதும். நம் வங்கிக்குத் தானே நல்ல பெயர் கிட்டும். நீங்கள் அவ்வாறு நடப்பீர்கள் என நம்புகிறேன். பெஸ்ட் ஆப் லக். உங்களுக்கு ஏதாவது



## சத்யா ஸ்ரீனிவாசன்

பிரச்னை என்றால் என்னிடம் வரலாம். என்னாலான உதவியை நிச்சயம் செய்வேன்.''

அவ்வளவு அன்பாகப் பேசியவரிடமா அதிகார வெறி? ஆணவம்? நம்ப முடியவில்லையே! காம்ரெட் பழனியின் பேச்சைக் கேட்கத் தயாரானான் பிரதீப்.

''நேற்று என்ன நடந்தது என்பது உங்களுக்குத் தெரியும். நான் வருவதற்குக் கொஞ்சம் 'லேட்'டாகிவிட்டது. உடனே மானேஜர் என்னை அறைக்குள் அழைத்து, 'ஏன் லேட்?' என்று கேட்டுவிட்டார். எனக்கு அவமானத்தில் உயிரே போய்விட்டது. இது வரையில் யாரும் இப்படி கேட்கத் துணிந்ததில்லை. இது என்ன பிரைவேட் கம்பெனியா? இவர் என்ன நம் முதலாளியா? இவரும் நம்மைப் போல் ஓர் ஊழியர்தானே? அதிகார வெறி அவரை அப்படி கேட்கச் செய்கிறது. அதை நாம் இப்போதே அடக்க வேண்டாமா?''

இந்த இடத்தில் சற்று நிறுத்திச் சுற்றும் முற்றும் பார்த்தார் பழனி. சுமார் ஐம்பது பேர்கள் இருந்த கூட்டத்தில் யாரும் மூச்சு விடவில்லை. மேலும் தொடர்ந்தார்:

''அன்று அப்படித்தான். சேகர் சிகரெட் பிடிக்க வெளியே சென்றான். அப்போது அவன் நண்பன் — அவனும் ஒரு பாங்க் சிப்பந்தி — எதிர்பாராத விதமாக அங்கு வரவே, அவனுடன் டீ அருந்திவிட்டுச் சற்று நேரம் பேசிவிட்டு வந்திருக்கிறான். அது பொறுக்காத மானேஜர் அவன் வந்தவுடன் அவனை அழைத்து ஏசியிருக்கிறார். 'என்ன இப்படி ஆபீஸ் வேளையில் வெளியே போய் விட்டீர்கள்? உங்கள் கவுண்டரில் எவ்வளவு கூட்டம் பார்த்தீர்களா? ஒரு கஸ்டமர் ஒரு 'டிராப்ட்' வாங்க அரை மணி நேரமாகக் காத்திருக்கிறார்' என்று சத்தம் போட்டார். ஆனால் நம் சேகர் பயந்தவனல்ல. 'எனக்கு டீ குடிக்கக் கூட உரிமையில்லையா? வேண்டுமானால் அந்த கஸ்டமருக்கு நீங்கள் 'டிராப்ட்' எழுதிக் கொடுக்க வேண்டியதுதானே?' எனத் திருப்பிக் கேட்டு அவரைத் தலை குனியவைத்துவிட்டான்.''

திடீரென உமாவின் குரல் இடைமறித்தது. ''சார், நேற்று என்னை என்னமாய்ப் பேசிவிட்டார் தெரியுமா? சினிமாவுக்குப் போக டிக்கெட் ரிசர்வ் செய்வதற்காக 'அலங்கார்' தியேட்டருக்கு போன் செய்தேன். அங்கே 'ஹவுஸ்புல்' என்று கூறிவிட்டார்கள். 'அப்ஸரா'வில் டிரை செய்யலாம் என்று போனை எடுத்தவுடன், 'என்னம்மா இது, ஆபீஸ் போனை இப்படியெல்லாமா மிஸ்யூஸ் செய்வது? ஏதாவது அவசர காரியம் என்றால் கூட பரவாயில்லை!', என்று கடுகடுத்தார். எனக்கு வந்த கோபத்தில், 'இது என்ன உங்கள் அப்பன் வீட்டு போனா?'' என்று கேட்டு விட நினைத்தேன்'' என்று அவள் முடிக்கும் முன்பே, ''நீங்கள் கேட்டிருக்க வேண்டும்! கேட்காமல் விட்டது தவறு'' என பல குரல்கள் ஏக காலத்தில் முழங்கின.

பிரதீப் திகைத்துப் போய்விட்டான். மானேஜர் நடந்து கொண்டதில் என்ன தவறு என்று அவனுக்குப் புரியவில்லை.

''மானேஜர் கேட்பதில் என்ன தவறு? அவர் வேலையே அதுதானே?'' என்று பிரதீப்

முழுக்க முழுக்கச் சர்க்கரையாகவே இருந்து விடாதே; உலகம் உன்னை விழுங்கி விடும். முழுக்க முழுக்க எட்டிக் காயாக இருந்து விடாதே; உலகம் உன்னை உமிழ்ந்து விடும்.

—பாரசீகப் பழமொழி. தகவல்: வி. பிருந்தா.

கேட்டதுதான் தாமதம். நாலாபுறமிருந்தும் ஏக கூச்சல்.

"வந்து இரண்டு மாதம் கூட ஆகவில்லை. இதற்குள் ஜால்ராவா?"

"சொய்ங்—சக். சொய்ங்—சக்."

"வாத்யாரே, மானேஜ்மெண்டை நம் பாதே. நல்லது கெட்டது எல்லாத்துக்கும் யூனியன்தான்."

ஆரவாரம் சற்று ஓய்ந்ததும் யூசுப் எழுந்தான். "காம்ரெட் பிரதீப் புதியவர்; பயப்படுகிறார். அவருக்குக் கூறிக்கொள்கிறேன்... நாம் யாருக்கும் அஞ்ச வேண்டிய அவசியமில்லை. வேலை கிடைக்கும் வரைதான் நாம் பயப்பட வேண்டும். பிறகு நாம்தான் ராஜா. நம்மைக் கண்டு அதிகாரிகளும், நிர்வாகமும், ஏன் அரசாங்கமுமே பயப்பட வேண்டும். பயப்படுகிறார்கள். ஏன்? நாம் நினைத்தால் நாட்டின் பொருளாதாரத்தையே ஸ்தம்பிக்க வைக்க முடியும். அப்படியிருக்க இந்த சுண்டைக்காய் மானேஜருக்கா தண்ணீர் காட்ட முடியாது? நாளையிலிருந்து ஒத்துழையாமைப் போராட்டம்!

கூட்டம் அட்டகாசச் சிரிப்புடன் கலையத் தொடங்கியது.

"ஒத்துழையாமை என்றால் என்ன?"

யூசுப் பிரதீப்புக்கு விளக்கினான்.

"இப்போது செய்வதுபோல்சுறுசுறுப்பாக வேலை செய்யக் கூடாது. தினமும் நூறு கடிதங்களை டெஸ்பாட்ச் செய்கிறீர்கள் அல்லவா? இனி இருபது கடிதங்கள் அனுப்பினாலே போதும். மெதுவாகச் செய்யுங்கள். கடிதங்களை ஊர் வாரியாகப் பிரித்துக் கொள்ள இரண்டு மணி நேரம் செலவிடுங்கள். பிறகு ரிஜிஸ்தரில் நிறுத்தி நிதானமாக அழகாக ஆனால் தப்புத் தப்பாக எழுதுங்கள். பயப்பட வேண்டாம்."

எல்லோரும் அப்படியே செய்தார்கள்.

பத்து மணிக்கு முன்பே வந்துவிட்டாலும் வராந்தாவில் சுற்றிக் கொண்டிருந்தார்கள். சரியாக பத்து மணிக்கு ஓடி வந்து ஒவ்வொருவராக அட்டென்டென்ஸில் கையெழுத்திட்டார்கள். கையெழுத்துப் போடுவதிலும் விளையாடினார்கள். ஒருவர் கையெழுத்துப் போட்டவுடன் ரிஜிஸ்தரை மூடிவிடுவார். அடுத்தவர் வந்து மீண்டும் ஒவ்வொரு பக்கமாகத் திறந்து உரிய இடத்தில் கையெழுத்திட்டு மீண்டும் மூடிவிடுவார். இப்படி கையெழுத்து போடவே அரை மணி ஆகிவிடும்.

பக்கத்திலேயேயிருந்த ரிஜிஸ்தரை எங்கெங்கோ தேடினார்கள். பேனாவுக்கு அடிக்கடி 'ரீபில்' மாற்றினார்கள். 100+100=2000 என்று போட்டார்கள். பதினைந்து நிமிடங்களில் கொடுக்க வேண்டிய டிராப்ட்டுக்கு மறுநாள் வரும்படி வாடிக்கையாளர்களிடம் கூறினார்கள். இரவு 10 மணிவரை 'கேஷ்' அட்ஜஸ்ட் செய்யாமல் வைத்திருந்தார்கள்.

முதல் இரண்டு நாட்கள் மக்கள் திணறினார்கள். பிறகு ஓரளவு விஷயத்தைப் புரிந்து கொண்டு 'இது சரிப்படாது' என்று வேறு வங்கிகளைத் தேடிப் போனார்கள்.

ஒரு நாள் மானேஜர் யூசுப்பிடம் கெஞ்சிக் கொண்டிருந்தார்.

"வந்திருப்பவர் ஒரு புது கஸ்டமர். ஐந்து லட்சம் ரூபாய் டெபாஸிட் செய்ய வந்திருக்கிறார். இந்த நேரத்தில் நம் உள் விவகாரங்களை மறந்து அவருக்குச் சீக்கிரம் 'ரசீது' கொடுக்க ஏற்பாடு செய்யுங்கள்."

"அது எப்படி சார் முடியும். எங்கள் நேரப்படிதான் நாங்கள் வேலை செய்ய முடியும். உங்கள் அவசரத்துக்கு நாங்கள் ஆட முடியாது. வேண்டுமானால் நாளைக்கு வந்து ரசீதைப் பெற்றுக் கொள்ளச் சொல்லுங்கள்"—யூசுப்.

"அவர் வெளியூர்க்காரர். நம்மைத் தேடி வந்திருக்கும் டெபாஸிட்டைக் கை நழுவ விட்டால், நாம் எப்படிக் குறியீட்டை அடைய முடியும்?"

"சார் அதெல்லாம் உங்கள் தலையெழுத்து. எங்களுக்கும் அதற்கும் சம்பந்தமில்லை" நிர்தாட்சண்யமாகப் பதில் வந்தது.

அந்த கஸ்டமர் போயே விட்டார். மானேஜரின் கண்கள் ஈரமாகிவிட்டன. யூசுப்பிற்கு முதல் வெற்றி.

மானேஜர் எத்தனை நாட்கள்தான் நடப்பவற்றைப் பார்த்துக் கொண்டு மவுனமாய் இருக்க முடியும்? ஹெட் ஆபீஸுக்குத் தகவல் தந்தார். ஆனால் அதற்கு முன்பே யூசுப் யூனியன் தலைமைக்கு மானேஜரின் அராஜகத்தைப் பற்றித் தெரிவித்திருந்தான்.

ஒருநாள் திடீரென்று முன்னறிவிப்பின்றி வந்து நின்றனர், வங்கியின் ஜெனரல் மானேஜரும் யூனியன் தலைவரும். வந்த உடனேயே தோளிலிருந்த துண்டைச் சரிசெய்தவாறே மானேஜரிடம் முதல் கேள்வியை வீசினார் யூனியன் தலைவர்.

''ஏன், ஸார், இப்படியெல்லாம் தொழிலாளர்களிடம் தகராறு செய்கிறீர்கள்?''

''நேரத்துக்கு வந்து உங்கள் வேலையை ஒழுங்காகச் செய்யுங்கள் என்று சொன்னால் அதற்குப் பெயர் தகராறா?'' என்ற மானேஜரும் சூடாகக் கேட்கவே ஜெனரல் மானேஜர் தலையிட்டார்.

''சரி, மிஸ்டர் மானேஜர். நீங்கள் உங்கள் கேபினுக்குப் போய், யூனியன் பிரதிநிதியை அனுப்புங்கள். அவர் புகாரைக் கேட்ட பின் உங்களைக் கேட்கிறோம்.''

யூகப் உள்ளே சென்றார். அரை மணி நேரம் கழித்து வெளியே வந்தார். முகத்தில் மகிழ்ச்சி ததும்பிக் கொண்டிருந்தது.

''மானேஜருக்கு டிரான்ஸ்பர் நிச்சயம்!''

உள்ளே அழைக்கப்பட்ட மானேஜரை, 'வாங்கு வாங்கு' என்று வாங்கிக் கொண்டிருந்தார் ஜெனரல் மானேஜர்.

''நீ எல்லாம் என்னய்யா மானேஜர்? காலத்துக்கு ஏற்ப நடந்து கொள்ளத் தெரியவில்லை, ஊழியர்களுடன் ஒத்துப் போகத் தெரியவில்லை. என்ன படிப்பு இருந்து என்ன பிரயோஜனம்? கொஞ்சம் விட்டுக் கொடுத்துப் போக வேண்டும். தட்டிக் கொடுத்து வேலை வாங்க வேண்டும். அவர்களைக் கண்டிக்க நமக்கு என்ன உரிமை இருக்கிறது?''

மானேஜர் முகத்தில் ஈயாடவில்லை. ஈனமான குரலில் சொன்னார்:

''சார் நீங்கள் சொல்வது எனக்கு விளங்கவில்லை. ஆபீஸுக்கு லேட்டாக வரக் கூடாது என்று சொன்னது தவறா? ஆபீஸ் வேளையில் வெளியே சென்று, அரட்டையடித்து வாடிக்கையாளர்களைக் காக்கவைக்காதீர்கள் என்று சொன்னது தவறா? நீங்கள் தானே அனாவசியமான செலவைக் குறைக்க வேண்டும் என்று சுற்றறிக்கை மேல் சுற்றறிக்கையாக அனுப்பிக் கொண்டிருக்கிறீர்கள்? அதன்படி தானே ஆபீஸ் போனை யூஸ் செய்யக் கூடாது என்றேன். இதில் எது தவறு?''

ஜெனரல் மானேஜர் சலித்துக் கொண்டார்.

''உனக்கெல்லாம் யாருய்யா மானேஜர் போஸ்ட் கொடுத்தான். நீ லாயக்கில்லை.''

மானேஜர் கூம்பிய முகத்தோடு தன்னறைக்குள் நுழைந்து தலையைக் கைகளில் புதைத்துக் கொண்டு அமர்ந்தார்.

சனியன் பிடித்த இந்த வேலையையே விட்டுத் தொலைத்து விடலாமா? என்று கூட யோசித்தார். ஆனால் வயிறு என்று ஒன்று இருக்கிறதே! அவரை நம்பிச் சில ஜீவன்கள் இருக்கின்றனவே?

திடீரென அறைக்குள் நுழைந்தார் ஜெனரல் மானேஜர்.

''சாரி, ஜென்டில்மேன். ஐயாம் அண்டர் பிரஷர். எப்படியாவது உனக்கு நல்ல இடமாக வாங்கித் தர முயற்சி செய்கிறேன். அங்கே போயாவது புத்திசாலித் தனமாய் நடந்து கொள்'' என்றவாறு சென்றுவிட்டார்.

புத்திசாலித்தனம் என்றால்....? உன் பணியாளர்களை, உனக்குச் சமமாக அல்ல; உன் உயர் அதிகாரியாக நினைத்துப் பணிந்து போ!' என்பதுதானா? மானேஜர் நீண்ட நேரம் யோசித்துக் கொண்டே இருந்தார்.

## அடுத்தவாரக் கவர்ஸ்டோரி :-



''லைட் மியூசிக் மதிப்பிழந்து விட்டது; கர்நாடக இசையே இளைஞர்களை ஈர்க்கிறது!''

— ஆணித்தரமாகக் கூறுகிறார் யக்ஞராமன்

## மணிவிழாக் காணும் மாமணி:



# மனிதாபிமானமே இவர் மதம்

புட்டபர்த்தி. மாலை நாலு மணி. சூரியனின் பொன்னொளியில் பிரசாந்தி நிலையக் கட்டிடத்தின் வண்ணங்கள் பளபளக்கின்றன. விநாயகர், முருகன், கண்ணன் ஆகிய திருவுருவங்கள் மேன்மாட முகப்பிலும்தூண்களிலும் கோவில் போன்ற அமைப்பிலே காணப்படுகின்றன. இவைசைவவைஷ்ணவ ஒற்றுமையைச் சுட்டுகின்றன எனில் இதர மதங்களின் சின்னங்களும் இடம் பெற்று சர்வ மத சம்மதத்தையும் வலியுறுத்துகின்றன.

பிரசாந்தி நிலையத்தின் வாசலில் மணல் பரப்பில் அமர்வதற்காக ஆண்கள், பெண்கள் என்று இரு பிரிவினராக மக்கள் நீண்ட வரிசைகளில் காம்பவுண்டு சுவருக்கு வெளியே நிற்கிறார்கள். சுவருக்கு மேலாக எட்டிப் பார்த்தால் இம்மி அளவு சுருக்கமும் இன்றி வெண்பட்டு விரித்தாற் போல மணற் பரப்பு. அதில் ஒரு அப்பழுக்கு இல்லை. ஒரு காலடிச் சுவடு கிடையாது!

பக்தி உணர்வும், அடக்கமும் நம்மையறியாமல் ஆட்கொள்ள அத்துடன் ஆச்சர்ய உணர்வும் கலந்துவிட நகர்கிறோம். அங்கே ஒரு சகோதரி கரம் கூப்பி, 'அந்தப் பக்கம் போக வேணும்' என்று மிருதுவான குரலில் பணிவுடன் வேண்டுகிறார். அந்தத் தொண்டரிடம் பேச்சை விடச் சைகையே அதிகம். ஆண்கள் கியூ வரிசையைக் காட்டுகிறார்.

இதமான மர நிழல்கள். மெல்லிய பூங்காற்று. கியூ வரிசைகள் நகர்கின்றன. ஒருவர் பின் ஒருவராகச் சென்று அதே வரிசையில் அமர்கிறார்கள், அமைதியாக. முண்டி அடித்துக்கொண்டு முதலிடத்துக்கு முந்துவதில்லை. பலர் கரங்களில் பாபா பற்றிய புத்தகமோ அல்லது சுலோகங்கள் அடங்கிய நூலோ இருக்கிறது. பிரித்து மௌனமாகப் படிக்க ஆரம்பிக்கிறார்கள். மற்றவர்கள் ஒருவித ஆவல் துடிப்புடன் பிரசாந்தி நிலையத்தின் வாசலையே பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் கண்களில் பக்தியும் பிரேமையும் ஆர்வமும் போட்டியிடுகின்றன. புட்டபர்த்தியில் உள்ள கல்லூரி, பள்ளிகளிலிருந்து குறிப்பிட்ட எண்ணிக்கையில் சில மாணவர்கள் வருகிறார்கள். அவர்கள் நடையிலே இளமை வேகம் இருக்கிறது. ஆனால் அவர்களும் அமைதியாக அமர்கிறார்கள். அவர்கள் கரங்களையும் பாடப் புத்தகமோ, அல்லது சுலோகப்புத்தகமோ அலங்கரிக்கிறது. பாபா தரிசனம் தரும் நேரம் வரும் வரை அந்தச் சில நிமிஷங்களையும் வீணாக்காமல் படிக்கிறார்கள். முறை வைத்து நாளை வரும் மாணவர் குழு வேறாயிருக்கும்.

மொத்தத்தில் சுமார் இரண்டாயிரம் பேர்களுக்குக் குறைவில்லை. இத்தனை பேர் திரண்டிருக்கும் இடத்தில் குடி கொண்டிருக்கும் நிசப்தத்தை என்னென்பது! அந்த அமைதியைத் தெய்வீக அமைதி என்று வர்ணிக்காமல் வேறு எப்படி சொல்வது! அந்தக் கட்டுப்பாட்டை எவ்வாறு விளக்குவது! இதோ, விநாடிப் போதும் பிசகாமல் சரியாக 4.30 க்கு சத்ய சாயி பாபா கதவைத் திறந்து கொண்டு வெளியே வருகிறார்.

கவர் ஸ்டோரி

அவரைக் கண்டதுமே ஒரு சிலிர்ப்பு அலை கூட்டத்தினரிடையே பரவுகிறது. அந்த உருவத்தைக் கண்களால் தரிசித்து மகிழ்கிறது கூட்டம். திருமுகத்தை வைத்த கண் வாங்காமல் நோக்கிப் பார்வையாலேயே விழுங்கித் தத்தமது மனங்களில் சிறைப்படுத்திக் கொள்கின்றனர். இத்தனைக்கும் ஒரு ஆஹாகாரம் இல்லை. ஒரு கசமுசா சத்தம் இல்லை. ரகசியமாகக் கூட ஒரு சொல் பரிமாற்றம் கிடையாது! மூச்சு விடவும் மறந்தார்களோ!

பாபா மெதுவாக அடியெடுத்து மிருதுவாக வைத்து நடக்கிறார். உயரம் குறைவுதான். அவருக்கே உரித்தான பாணியில் காவி நிறத்தில் பளபளப்பான அங்கி. அது தரையில் பட்டும் படாமலும் தவழ்ந்து அவருடன் சென்று பாதங்களைக் காட்டியும் காட்டாமலும் மாயம் செய்கிறது! கண்ணாம்பூச்சி விளையாடுகிறது! வலக்கரத்தை அவர் மடித்துத் தோளுயரத்தில் உள்ளங்கையைத் தாமரை வடிவாக்கி இலேசாகச் சுழல்வது போன்ற பாவனை காட்டுகிறார். அதரங்கள் ஏதோ மந்திரச் சொற்களை உச்சரித்தபடி மிருதுவாக அசைகின்றன. என்னையறியாமல் என் கரங்கள் குவிந்து உயர்கின்றன. அது கூட அமைதி குலைக்கும் ஓர் அவசியமற்ற சலனம், மனம் குவிவதுதான் முக்கியம் என்று சொல்லாமல் சொல்பவர் போல் அபய ஹஸ்தம் காட்டி அடங்கியும் இருக்கச் செய்கிறார்.

பிரசாந்தி நிலயத்தின் வாசலில் சுமார் நாலாயிரம் கண்கள் அவரது ஒவ்வொரு அசைவையும் கண்ணிமைக்காமல் காண்கின்றன. பாபாவின் கண்களிலிருந்து பிரவகிக்கும் அன்பிலே நனைந்து இதயத்தில் தேக்கி, அதில் திளைத்து, ஆனந்தித்து அந்த மாறாத அருள் புன்னகையைப் பார்த்து அதிலேயே நிறைவு கண்டு அதிலேயே சங்கமித்தும் போகிறார்கள். தான் வேறு அந்த அன்பு வேறு என்ற உணர்வின்றி ஒன்றுபட்டு மோனப் பெருவெளியில் மிதக்கத் தொடங்கி விடுகிறார்கள்!

சத்ய சாயி பாபா எத்தனையோ அற்புதங்களை சாதிக்கிறார் பார்க்கிறோம், கதை கதையாகக் கூறக் கேட்கிறோம். அவற்றிலெல்லாம் மிகப் பெரிய ஓர் அற்புதம், அவரது தரிசனத்துக்காகக் காத்திருக்கும் மக்களிடையே காணப்படுகிற கட்டுப்பாடுதான். கோவில்களில் சுவாமி தரிசனம் செய்யப் போகும் மக்கள் எப்படியெல்லாம் வளவளவென்று பேசி அரட்டை அடிக்கிறார்கள். பகவானைக் கும்பிடும் போது கூட எப்படி முருகா என்றோ கோவிந்தா என்றோ கூவி அழைக்கிறார்கள்! அதே மக்கள் பிரசாந்தி நிலய வாசலில் எவ்வாறு மணற்பரப்பில் ஊசி விழுந்தால் கூடக் கேட்கும் அளவுக்கு அமைதி காக்கிறார்கள்! இந்தக் கட்டுப்பாடு அதிகாரத்தினால் உருவானதல்ல, அன்பினால் தன்னியல்பாக ஏற்பட்டிருப்பது என்பது அற்புதத்திலும் அற்புதம்!

இரண்டாயிரம் பேர்களின் அன்பையும் ஏற்று அன்பை வழங்கி அவர்களின் துயர்களைத் தனதாக்கிக் கொண்டு அருட்கரத்தால் அபயம் அளிக்கிறார் பாபா. சிலரை இலேசாகத் தொடுகிறார். சிலரிடம் அவர்களது கண்ணீர்க் கடிதங்களைக் கேட்டுப் பெற்றுக் கொள்கிறார். இன்னும் சிலரிடம் மிருதுவாக இரண்டொரு ஆறுதல் வார்த்தைகள் சொல்கிறார். தமது பள்ளி, கல்லூரிகளில் படிக்கும் மாணவர்களை நெருங்கும்போது அவர் வதனத்தில் தந்தைப் பாசத்துடன் இலேசான குறும்பும் இழையோடுவதுபோல் நமக்குத் தோன்றுகிறது. ஒரு மாணவனிடம் பாடம் சம்பந்தமாக ஏதோ கேட்கிறார். இன்னொருவனிடம் ஆள் காட்டி விரலை உயர்த்தி அசைத்துப் புன்னகை மாறாமலே ஏதோ கூறி எச்சரிக்கிறார். மேலே நகர்கிறார்.

இரண்டாயிரம் பேர்களுடைய குறைகளையும் கேட்டறிந்து அதில் பங்கு கொண்டு ஆறுதலும் பரிகாரமும் சொல்லிக் கொண்டிருக்க முடியாது. குறைகள் ஏதும் அற்ற அனைவரிடமும் அளவளாவி அருள் மொழிகளை உதிர்க்க இயலாது. எனவே அவர்களின் பிரதிநிதிகளாக இங்கொருவர் அங்கொருவர் என்று சுமார் பத்துப் பதினைந்து பேர்களைத் தேர்ந்தெடுக்கிறார் பாபா. அவர்களை ஒரு தனி அறைக்கு அழைத்துப் போய் உரையாடுகிறார். இப்படி தேர்ந்தெடுக்கப்படுபவர்களில் ஒரு நகர மேயரும் உண்டு; பட்டிக்காட்டுப் பாமரனும் உண்டு. அமெரிக்காவில் பணியாற்றும் இந்தியரான விஞ்ஞானி இருக்கிறார். ஸிக்கிமிலிருந்து வந்த பௌத்த மதத்தைச் சேர்ந்த தாயும் மகளும் உள்ளனர். அவர்கள் மூலமாக அந்த இரண்டாயிரம் பேருமே பாபாவுடன் பேசிய உணர்வையும் நிறைவையும் அடைகிறார்கள். இது எப்படி சாத்தியம் என்கிறீர்களா? ஒரு உதாரணம் தருகிறேன். மிஸ் லூஸி அமெரிக்காவிலிருந்து வந்து நாலு நாட்களாகப் புட்டபர்த்தியில் தங்கியிருந்தாள். அவளை பாபா அழைக்கவில்லை. ஆனால் மற்றொரு அயல் நாட்டுப் பெண்மணி நாலு நாட்களும் அழைக்கப்பட்டுச் சென்றாள். லூஸிக்கு பாபா மீது கோபமான கோபம்! நாலாம் நாள் இரவு புட்டபர்த்தியில் பாபாவின் அருளாணையினால்



அமைக்கப்பட்டுள்ள பல பயணியர் விடுதிகளில் ஒன்றில் தன் அறைக்கு லூஸி திரும்பிக் கொண்டிருந்த போது யதேச்சையாக அந்த மற்றொரு பெண்ணைப் பார்த்தாள். பொறுக்க முடியாமல் படபடத்துக் கேட்டும் விட்டாள். "நீ யார்? தினம் தினம் பாபா உன்னை அழைக்கிறாரே?"

"அதுதான் அதிசயம்!" என்றாள் மேரி. "எனக்கு மூளைக் கட்டி; தாங்க முடியாத வலி; டாக்டர்கள் கைவிட்ட கேஸ் என்று பாபாவிடம் நான் சொல்லவே இல்லை! அவராகவே அழைத்து நாலு தினங்களாக என் தலையில் கை வைத்து ஆசீர்வதித்து அனுப்புகிறார். வலி குறைந்து வந்தது; இப்போது வலியே இல்லை! பாரீஸ் திரும்பி எக்ஸ்ரே எடுத்துப் பார்க்க வேண்டும். மூளைக் கட்டியின் சுவடே இராது என்றுதான் கருதுகிறேன். உனக்கும் எழுதி விவரம் தெரிவிக்கிறேன்" என்று கூறி லூஸியின் விலாசம் வாங்கிக் கொண்டாள் மேரி. "எனக்கு ஒரு குறையும் இல்லாத போது பாபா என்னை அழைக்கவில்லையே என்று நான் தாபப்பட்டது எவ்வளவு தவறு! மேரி மூலமாக என்னிடம் பேசிவிட்டார் பாபா! இதைவிடச் சிறப்பான விதத்தில் பாபா என்னை நேரில் அழைத்திருந்தாலும் பேசி, உபதேசித்திருக்க முடியாதே!" என்று மனம் நெகிழ்ந்து கடிதம் எழுதினாள் லூஸி. அந்தக் கடிதம் இப்போதும் புட்டபர்த்தியில் பாபாவின் அருளாணைப்படி ஸநாதன ஸாரதி என்ற பத்திரிகையை ஆசிரியராக இருந்து நடத்தி வரும் என். கஸ்தூரியிடம் பத்திரமாக இருக்கிறது. "இன்று காலை தான் வந்தது" என்று கூறி, கஸ்தூரி அந்தக் கடிதத்தை எனக்குக் காட்டினார். இது போன்று அவர் கண்டும் கேட்டும் உள்ள எத்தனையோ அற்புதங்களைச் சொல்கிறார். மற்றவர்களும் பேசுகிறார்கள், எழுதுகிறார்கள்.

பேசத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களுடன் பாபா தனி அறையை அடைந்ததும் வெளியே சுமார் ஒரு மணி நேரம் பக்திப் பாடல்கள், பஜனைப் பாடல்கள் தொடர்கின்றன. ஆழமி



புட்டபர்த்தியில் நிர்வாகக் கட்டிடம் அமைந்துள்ள குன்றின் மீதிருந்து கல்லூரிகளும், மாணவர் விடுதிகளும் அளிக்கும் தோற்றம்.

யுள்ள அத்தனை பேரும் இறையுணர்வில் லயித்துக் கேட்கிறார்கள். பாபா மறுபடி தோன்றுகிறார். ஆரத்தி எடுக்கப்படுகிறது. ஆரத்தி பாடல் ஒலிக்கிறது. பூஜா மண்டபத்துள் புகுந்து மறைகிறார். அதே சமயம் ஒவ்வொரு அன்பரின் இதயத்திலும் புகுந்து உறைகிறார். அவர்கள் கவலைகள் கரைந்து விட மனம் இலேசாகிக் கலைகின்றனர்.

பாபாவுக்கும் பக்தனுக்கும் இடையில் நிகழ்கின்ற இந்த அன்புப் பரிமாற்றம் என்ற அற்புதத்துக்கு இணையான இன்னொரு அற்புதத்தைச் சொல்ல வேண்டும் என்றால் அது புட்டபர்த்தி என்ற பட்டிக்காடு பத்தாண்டுகளுக்குள்ளாக ஒரு பல்கலைக்கழக நகரமாக உருமாறிய விந்தையைத்தான் குறிப்பிட வேண்டும். கல்விக் கூடம் என்றதுமே பாபா மனத்தில் முதலில் பெண்களுக்கான கல்லூரிதான் பளிச்சிட்டது. நாட்டின் எதிர்காலப் பிரஜைகளை நல்லவர்களாக உருவாக்குகிற பெரும் பொறுப்பு தாய்மார்களுக்குத்தான் இருக்கிறது. எனவே பெண்களுக்குக் கல்வியும் உயர் பண்பாடும் போதிக்கும் கல்லூரிதான் மிகவும் முக்கியம் என்ற நோக்கில் அனந்தபூரில் ஒரு மகளிர் கல்லூரியும் மாணவியர் விடுதியும் உருவாக்கினார் பாபா. அதன் பிறகு பெங்களூர் அருகே ஒயிட்ஃபீல்டில் ஒரு கல்லூரியும் மாணவர் விடுதியும் எழுந்தன. பிறகு அதனருகிலேயே ஒரு மருத்துவ மனையும் தோன்றியது.

பின்னர் படிப்படியாக புட்டபர்த்தியில் பள்ளிக் கூடம், கல்லூரி, மாணவர் விடுதிகள், கோசாலை என்று பலவும் தோன்றின. கல்லூரிகள் அனைத்தையும் நிர்வாகம் செய்ய ஒரு குன்றின் மீது அலுவலகக் கட்டிடம் கம்பீரமாக உயர்ந்தது. அக்குன்றின் மீதிருந்து பார்த்தால் சித்ராவதி நதியும், விளையாட்டு அரங்கமும் பிரம்மாண்ட பூர்ண சந்திரிகா கலை அரங்கமும் மற்றும் பள்ளி, கல்லூரி, மாணவர் விடுதி கட்டிடங்களும் குன்றுகளால் சூழப்பட்டு மனோரம்யக் காட்சி தருகின்றன. ஆரம்பப் பள்ளியில் கோகுலக் கண்ணன் முகப்பிலே குழலூதுகிறான். உயர்நிலைப் பள்ளி முகப்பில் சரஸ்வதி எனில், கல்லூரி முகப்பில் தட்சிணாமூர்த்தி காட்சி தருகிறார். அவரிடம் ரிஷிகள் பாடம் கேட்கிறார்கள். பள்ளியின் பின்புறத்தில் மான்கள் துள்ளி உலவுகின்றன. முயல்கள் குதித்தோடுகின்றன. சடசடவென்ற சத்தம் கேட்டுத் தலையை உயர்த்தினால் புறாக்கள் சுதந்திர, சமாதானச் செய்திகளுடன் சிறகடித்துப் பறக்கின்றன. இத்தகைய உயர்ந்த நோக்கங்களை உருவகமாக மட்டுமின்றி உண்மையாகவே மாணவர்களுக்குச் சொல்லித் தருகின்றன, கல்வி நிலையங்கள்.

பாடங்கள் போதிப்பது மட்டுமல்ல நோக்கம், புட்டபர்த்தி கல்வி நிலையங்களுக்கு. முழுமையான மனிதனை உருவாக்குவதே லட்சியம். அதற்கேற்ப பாட திட்டங்களையும் பரீட்சை முறைகளையும் அமைத்திருக்கிறார் துணைவேந்தர் திரு கோகக். "ஆங்கிலேயர் நம்மிடம் விட்டுச் சென்ற கல்வி முறைப்படி"

பாட திட்டத்தின் சில பகுதிகளைப் படித்து மனனம் செய்தால் பரீட்சையில் தேறிவிட லாம். ஆனால் இந்தக் கல்வி நிலையங்களில் அந்த நடைமுறை மாற்றப்பட்டுள்ளது. நோக்கம் பரீட்சையில் தேறுவது அல்ல, அறிவைப்பெறுவதும்விருத்திசெய்துகொள் வதும்தான் என்பது மாணவர்களுக்கு உணர்த்தப்படுகிறது. எம்மதமும் சம்மதம் என்ற அடிப்படையில் ஆக்கபூர்வமான மதச் சார்பின்மை அனுஷ்டிக்கப்படுகிறது.''

மாணவர் விடுதியின் தலைவர் நரசிம்ம மூர்த்தி விடுதியைச் சுற்றிக் காண்பித்தார். மாணவர்களுடன் பேச அனுமதித்துத் தலை மறைவானார்! எத்தனைவிதமான கேள்விகள் போட்டுத் துருவித் துருவிக் கேட்டாலும் மாணவர்களிடமிருந்து தெரிய வருவது அவர்களது மகிழ்ச்சியும் மனநிறைவும்தான். பாபாவின் அறுபதாவது பிறந்த நாள் மணி விழாவுக்கென்று சில மாணவர்கள் தாங்க ளாகவே இசை அமைத்து, பாட்டெழுதி பல் விதவாத்தியக் கருவிகளுடன் ஒத்திகை பார்த் துக் கொண்டிருந்தார்கள்.

நூலகமா, பண்டகசாலையா, ஹாஸ்டல் நிர்வாகமா, சமையல் சாப்பாடா, ஏதாவது பழுது பார்க்கப்பட வேண்டுமா? — சகலத் தையும் கவனித்துக் கொள்வது மாணவர் களே! மாணவர்களுக்கு உதவத்தான் வார்டனும் இன்னும் சிலரும் இருக்கிறார் களே தவிர அவர்களை ஆள்வதற்கு அல்ல. மாணவர்களின் தன்னலமற்ற சேவை ஹாஸ்டல், கல்லூரிக்கு வெளியேயும் பரவு கிறது. சுற்றுப்புற கிராமங்களுக்குச் சென்று பணியாற்றுகிறார்கள், புட்டபர்த்திக்கு வரும் யாத்திரிகர்களுக்கு உதவுகிறார்கள். பக்தர் களுக்கென்று அமைந்த உணவு விடுதியிலும் தங்குமிடங்களிலும் முறைபோட்டுக்கொண் டும் போட்டி போட்டுக் கொண்டும் பணி யாற்றுகிறார்கள். துப்புரவுப் பணியாளர்கள் இருந்தும் இவர்களும் ஒத்தாசை செய்கிறார் கள். துடைப்பத்தை எடுத்துத் தோட்டத்தைப் பெருக்கிக் கொண்டிருந்த ஓர் அயல் நாட்டுப் பெண்மணியைக் கூடக் காண முடிந்தது. சரீர உழைப்பும் சுற்றுப்புறத் தூய்மையும் புட்டபர்த்தியில் மதிப்புப் பெற்றிருப்பது போல் இந்தியாவில் வேறு ஓர் இடத்தில் காண முடியுமா — சந்தேகம். இப்படி மாண வர்கள் நடந்து கொள்ள வேண்டுமென்றால் ஆசான்கள் எப்படிப்பட்டவர்களாயிருக்க வேண்டும்? பாபா சொல்வார்: ''ஆசிரியர்கள் மூன்று வகை. மோசமான ஆசிரியன் எப் போதும் அது இல்லை, இது இல்லை என்று வசதிக் குறைவைச் சுட்டிக் காட்டிக் கொண்டே இருப்பான். நல்ல ஆசிரியன் சால்ஜாப்பு சொல்லாமல் இருக்கிற வசதி களைக் கொண்டு நிறைவான பாடம் போதிப் பான். மூன்றாவதாக ஒரு வகை உண்டு. அவன் கிரியா ஊக்கியாக இருந்து மாணவர்களை உன்னத நிலைக்கு உயர்த்துவான். (inspire செய்வான்)'' இப்படிப்பட்ட தலை சிறந்த ஆசிரியர்களை புட்டபர்த்தியில் படிக்கும் மாணவர்கள் குறைவின்றிப் பெற்றிருக்கிறார் கள் என்பதை அந்த மாணவர்களிடம் சற்று நேரம் பழகினாலே புரிந்து கொள்ளலாம்.

இந்தக் கல்வி நிலையங்கள் எல்லாம் இணைந்து ஒரு பல்கலைக்கழகமான விதமே ஓர் அற்புதம் என்று அதிசயத்துக் கூறுகிறார் துணைவேந்தர் கோகக். ''திடீரென்று ஒரு நாள் 'இங்கு ஒரு பல்கலைக்கழகம் உருவாக வேண்டும்' என்றார் பாபா. எங்களுக்குத் தூக்கிவாரிப் போட்டது. அங்கீகாரம் கிடைக் குமா என்று குழப்பமாகவும் இருந்தது. அதற் கேற்ப அரசு பல ஆட்சேபணைகளை எழுப்பி யது. ஆனால் என்ன அதிசயம்! அமைச்சரவை மாற்றங்கள் நிகழ்ந்தன. மத்தியிலும், மாநிலத் திலும் பாபா பக்தர்களே கல்வி அமைச்சர் களானார்கள்! 'இங்கே ஒரு புதிய முயற்சி நடக்கிறது; காரிய சாத்தியமான முயற்சி; கல்வி முறையில் வரவேற்கப்பட வேண்டிய புதிய திருப்பம்; இதற்கு அங்கீகாரம் அளிக்க வேண்டும்' என்று எங்கள் சார்பில் அமைச் சர்களே வாதாடி வெற்றி பெற்றனர்! ஆக, இதிலேயும் பாபாவின் அருள் சக்தியைத் தான் பின்னணியில் காண்கிறோம்.''

பாபாவின் அற்புதங்களை விளைவிக்கும் சக்தி மிகைப்படுத்தப் படுவதாகச் சிலர் வாதாடலாம். ஆனால் அத்தகையவர்கள் கூட அவர் புரிந்துள்ள நற்பணிகளை மிகைப் படுத்திப் பேசுவதோ, எழுதுவதோ சாத்திய மேயில்லை; எத்தனை சொன்னாலும் குறை வாகத்தான் இருக்கும் என்பதை ஒப்புக் கொள்வர். இறையுணர்வூட்டும் பணி, கல்வி போதிக்கும் பணி, இவற்றையடுத்து பாபா வின் மனிதாபிமானப் பணியை வர்ணிக்க வும் 'அற்புதம்' என்ற சொல்லை விடவும் பொருத்தமான ஒரு வார்த்தை இல்லை. (இருந்தால் பயன்படுத்திக் கொள்ளுங்கள். ஆட்சேபணை இல்லை!) சத்ய சாயி தாலுக்கா (ஆம், புட்டபர்த்தியைச் சுற்றியுள்ள பிர தேசம் அவர் பெயரிலேயே தாலுக்காவாக விளங்குகிறது) முழுவதும், கிராமங்கள் தோறும் குழாய்க் கிணறு இறக்கித் தந்து



* நன்றாகக் குரலெடுத்துப் பாடவும் செய்வார் — தம்பூராவுடன் ஓர் அபூர்வப் புகைப்படம்.



• ஆஸ்திரேலியாவிலிருந்து வந்தவர்கள்.

தண்ணீர்க் கஷ்டம் தெரியாமல் செய்திருக்கிறார் பாபா. சத்ய சாயி தாலுக்காவுக்கு அப்பாலும் பரவியுள்ளது இத்தகைய மனிதாபிமானப் பணிகள். தமிழ்நாட்டில் 300 கிராமங்கள் உள்பட மொத்தத்தில் 6000 கிராமங்களை இதுவரை சுவீகரித்துக் கொண்டு தமது பல்வேறு அமைப்புக்கள் மூலம் உதவி வருகிறார். நல்ல சாலைகள் அமைத்தல், கல்வி போதித்தல், சுகாதாரத்தை உணர்த்துதல், எம்மதமும் சம்மதம் என்ற அடிப்படையில் இறையுணர்வூட்டுதல், ஜாதி மத பேதங்களை ஒழித்தல் ஆகியன இந்தக் கிராமங்களில் முக்கியமாகக் கவனிக்கப்படுகின்றன. இவ்வாறு சுவீகரிக்கப்பட்ட ஒரு கிராமத்தில் ராம்மோஹன் ரெட்டி என்பவரைச் சந்தித்தேன். "பாபாவின் கருணைக்கு எல்லை ஏது" என்றார் அவர். "ஒரு நாள் நாங்கள் கூட்டமாகச் சென்று 'கிராமத்தில் ஓர் அனுமார் சிலை உள்ளது. அதற்குக் கோயில் கட்டித் தர வேண்டும்' என்று வேண்டினோம். 'ஆகட்டும், நீங்கள் பதிலுக்கு எனக்கு என்ன செய்கிறீர்கள்?' என்று கேட்டார். நாங்கள் தயங்கித் தயங்கி, 'என்ன எதிர்பார்க்கிறீர்கள்?' என்றோம். 'நான் கட்டித் தரும் கோயிலில் நாள் தவறாமல் மாலை நேரத்தில் நீங்கள் ஒன்று கூடி திவ்ய நாம பஜனை செய்ய வேண்டும், செய்வீர்களா?' என்றார். மகிழ்ச்சியோடு அந்த வாக்குறுதியை அளித்துவிட்டுக் கிராமத்துக்குத் திரும்பினோம். ஆச்சர்யம்! எங்களுக்கு முன்பே இன்ஜினியர் உதவியாளருடன் வந்து கோயில் எழ வேண்டிய இடத்தில் அளவெடுத்துக் கொண்டிருந்தார்!"

அந்தக் கிராமத்தில் முஸ்லீம்களும் உண்டு என்றறிந்த பாபா, மசூதியும் கட்டித் தந்தார்! குழந்தைகளுக்குப் பள்ளிக்கூடம் அமைத்தார்; சிறிய கைத் தொழிற் கூடங்களை ஏற்படுத்தி வருவாய்க்கு வழிகாட்டினார்! இப்படி ஓர் அரசாங்கம் செய்ய வேண்டிய காரியங்களை அதைவிடச் சிறப்பாகச் செய்து வருகிறார். இதற்கெல்லாம் பணம்? அன்பர்கள் தருகிறார்கள்; அயல் நாட்டவர் கொட்டிக் குவிக்கிறார்கள். இதுவரை வந்ததையெல்லாம் செலவழித்துக் கொண்டே இருந்திருக்கிறார்கள். இப்போதுதான் நன்கு வளர்ந்துவிட்ட நிறுவனங்களுக்கு நிரந்தர வைப்பு நிதிகள் உருவாக்கப்பட வேண்டும் என்ற எண்ணம் அரும்பு விட்டிருக்கிறது!

"அயல் நாட்டவரை இங்கு ஈர்ப்பது என்ன?" — கேட்டேன். "அவரைப் பற்றிப் படித்தேன். அவர் ஓர் அவதாரமாக எனக்குத் தோன்றினார். தரிசிக்க வந்தேன்" என்றார் ஹாலந்து நாட்டவர். "இவ்வளவு பரந்த மனப்பான்மை எந்த ஒரு மதத்தலைவருக்கும் கிடையாது; இவரைப் பார்க்க வேண்டும் என்ற உந்துதல் அதனாலேயே ஏற்பட்டது" என்றார் அமெரிக்கர் ஒருவர். "அவர் அன்பு எங்களை ஈர்த்தது; வந்தோம்" என்றனர் ஆஸ்திரேலியக் குழுவினர். "பல்வேறு மதங்களைப் பற்றி யாரும் முயற்சி எடுத்தால் தெரிந்து கொள்ளலாம். தத்துவ விளக்கங்களையும் பெறலாம்; ஆனால் அன்பு கிடைப்பதென்பது அரிது. அதற்கு ஏங்குகிறவர்கள் இங்கு வருகிறார்கள்" என்றார் கஸ்தூரி. "இரட்டைப் பட்டதாரி டாக்டர் பட்டம் பெற முயல்வது போல மதத் தலைவர்கள் பலரைச் சந்தித்துத் தேறிய பிறகு இறுதியாக 'எம்மதமும் சம்மதம்' என்பவரைப் புரிந்து கொள்ள இங்கு வந்து சேர்கிறார்கள்!"

குயுக்தியுடன் வருவோரும் உண்டு! ஓர் அமெரிக்க மனோதத்துவ நிபுணர். அவர் ஏசுவின் அற்புத லீலைகளையே பரிகசித்தவர். பாபா நிகழ்த்துவதாகக் கூறப்படும் அற்புதங்களையெல்லாம் விஞ்ஞான பூர்வமான மனோதத்துவ ரீதியாக நொறுக்கி விட்டால் ஏசுவின் லீலைகளையும் பொடிப் பொடியாக்கியதாகும் என்ற கருத்தில் புட்டபர்த்தி வந்து சேர்ந்தார். பரிகசிக்க வந்தவர் பாபாவின் பரம பக்தரானார்!" **Psychiatry** (மனோதத்துவம்) **Saichiatry** (சாயித் தத்துவம்) விடம் சரணாகதி அடைந்தது" எனத் தமது நூலில் எழுதினார்!

புட்டபர்த்தியில் பக்தர்களுக்கான உணவு விடுதியில் தலைமைப் பரிசாரகராக இலவசப் பணியாற்றுகிறவர் விமானப் படைத் தளபதியாக இருந்து ஓய்வு பெற்றவர்! "இன்னும் கொஞ்சம் சாம்பார்?" என்று உபசாரமாகக் கேட்கும் இப்போதும் விண்ணளாவத்தான் உயர்கிறார்! இவரும் இவரைப் போன்று சாயி சேவையில் ஈடுபட்டுள்ள பல்லாயிரக்கணக்கானோரும் சேர்ந்து பாபாவின் மணி விழாவை மிகச் சிறப்பாக நடத்தி விடத் தீர்மானித்திருக்கிறார்கள். புட்டபர்த்தியில் இம்மாதம் 23ம் தேதி 85 நாடுகளிலிருந்து 12,000 பிரதிநிதிகள் கூடுகின்றனர்! தவிர இந்தியாவிலிருந்தே பத்து லட்சம் பக்தர்கள் வந்து அலை மோதுவார்கள் என்று எதிர்பார்க்கப்படுகிறது! அத்தனை பேருக்கும் தங்குவதற்குத் தற்காலிக இடம், நிரந்தர விடுதி வசதிகள், இலவச உணவு முதலியவற்றுக்கு ஏற்பாடுகள் [illegible]

முரமாக நடந்து கொண்டிருக்கின்றன. சாலைகள் அகலப்படுத்தப் படுகின்றன. இரண்டு கோடி ரூபாய் செலவில் ஒரு வான இயல் போதனைக் கூடம் (**Planetarium**) உருவாகி முடிவுறும் தருவாயில் உள்ளது. 'எல்லாம் சரி, இத்தனை பேருக்கும் தண்ணீர்த் தட்டுப்பாடு இல்லாதிருக்க வேண்டுமே?' என்று கவலையுடன் பாபாவிடம் வினவும் அன்பர்களுக்கு, "சூஸ்தானு" (ஆகட்டும், பார்ப்போம்) என்று பதிலளிக்கிறார் பாபா. அவரது எத்தனையோ அற்புதங்களில் ஒன்றாக இதுவும் கவனித்துக் கொள்ளப்படும் என்று பக்தர்கள் நம்புகிறார்கள்!

நம்பி, தம்மை அண்டி வருபவர்களையும் (ஏன் வராதவர்களையும் கூட) அறநெறி மார்க்கத்தில் திருப்பி விடுகிற அல்லது தொடரச் செய்கிற பாபாவின் அருளுரைகளை பாபாவின் மற்றொரு பேரற்புதம் என்று வர்ணிக்கலாம். மிக எளிய சொற்களைக் கொண்டு மிக உயர்ந்த விஷயங்களைச் சொல்லி விளங்க வைக்கிற அந்த ஆற்றலை வேறெப்படி வர்ணிப்பது! பெங்களூர் கல்கி பிரதிநிதி வேங்கடாசலத்துக்கும் எனக்கும் அன்று பாபாவின் அருளுரைகளைக் கேட்கும் பாக்கியம் கிட்டியது. சின்னஞ் சிறு அறை. நெருக்கி அடித்துக் கொண்டு நாங்கள் ஒரு பத்து பதினைந்து பேர் அமர்ந்திருக்கிறோம். அதிலும் ஒரு பக்கம் பெண்கள்; எதிர்ப் பக்கம் ஆண்கள். ஒரு மூலையில் பாபா அமர்கின்ற ஆசனம். அதில், "சத்தியம், தர்மம், சாந்தி, பிரேமை" என்ற மூல மந்திரச் சொற்கள் எழுதப்பட்டுள்ளன. அதில் வந்து அமர்கிறார் பாபா. "என்ன மதராஸ்காரு, என்ன விசேஷம்?" என்கிறார் என்னைப் பார்த்து.

"உங்கள் மணி விழாவையொட்டி கல்கி வாசகர்களுக்கு உங்கள் ஆசியும் செய்தியும் வேண்டும்" என்று நான் கூறி முடிப்பதற்கு முன்பே, பாபா, "ஸார்! இது ப்ரசாந்தி நிலையம், அமைதியாகப் பேசுங்கோ" என்கிறார், புன்னகையுடன்! நானும் குரலைத் தாழ்த்திக் கொண்டு மீண்டும் அதே கோரிக்கையை அவர் முன் வைக்கிறேன். தலையாட்டிவிட்டு அவர் என் பக்கத்திலுள்ள ஓர் இளைஞரைப் பார்க்கிறார்.

"எங்கிருந்து வருகிறாய்? என்ன செய்கிறாய்?"

"அமெரிக்காவிலிருந்து வருகிறேன். கம்ப்யூட்டர் விஞ்ஞானி நான்" என்கிறார் அந்த இந்தியர்.

"என்ன சம்பாத்தியம்?"

"மாதம் அறுபதாயிரம் ரூபாய்."

'கேட்டுக் கொண்டாயா?' என்பது போல் என்னைப் பார்க்கிறார் பாபா. "பாருங்கோ, இத்தனை சம்பாதிக்கிறார், இங்கு வருகிறார்!"

எனக்குப் புரிகிறது. பணம் மனச்சாந்தி தராது. வாழ்க்கையின் குறிக்கோள் சம்பாத்தியமாக மட்டுமே இருந்தால் சந்தோஷம் இராது. பிறகு வேறென்ன தேவை?

"வீண் செலவு செய்யாதே" என்கிறார் பாபா அந்த இளைஞரைப் பார்த்து.

"இல்லை."

"பொய் சொல்லக் கூடாது."

தலைகுனிகிறார் விஞ்ஞானி.

"பெற்றோருக்குப் பணம் அனுப்பு; நல்ல காரியங்களுக்குக் கொடு; செல்வம் ஆடம்பரத்தை வளர்க்கக்கூடாது. செல்வம் பெருகி, அடக்கம் பெருகவேண்டும். நீ இளைஞன்.

* ஊசி விழுந்தால் கேட்கும் அளவில் நிசப்தம் காக்கும் பாபா பக்தர்கள்.



அமெரிக்காவில் தனியாக இருக்கிறாய். நல்லொழுக்கத்தைக் கைவிடாதே!''

உபதேசிக்கும் போதே இளைஞரிடம் கருணையும் பொங்குகிறது பாபாவுக்கு. அடுத்த கணம் பெரிய பெரிய ஸ்படிக மணிகளால் ஆன நீண்ட மாலை ஒன்று அவர் கரங்களில் தோன்றுகிறது. எங்கிருந்து எப்படி வந்தது? நாங்கள் வியப்படையக் கூட மறந்த ஒரு திகைப்பில் ஆழ்ந்து போகிறோம்.

''இங்கே வா.''

மண்டியிட்டு வணங்குகிறார் இளைஞர்.

''பிரார்த்தனை செய்வாயா?''

''செய்வேன்.''

''எப்போது?''

''நேரம் கிடைக்கும் போதெல்லாம்.''

''அப்படி செய்யக் கூடாது. எதையும் குறிப்பிட்ட நேரத்தில் செய்ய வேண்டும். நேரம் தவறாமை முக்கியம். ஒரு நாள் காலை பத்து மணிக்கு ஒரு நாய்க்குச் சாதம் வைக்கிறாய். மூன்று நாள் இப்படி செய்தால் நாலாம் நாள் நாய் சரியாக மணி பத்தடித்ததும் அங்கு வந்து சேர்கிறது. அழைக்காமலே வருகிறது. நாய் வரும்போது பகவான் வர மாட்டாரா? நிச்சயம் வருவார்; நமக்கு அருள் புரிவார். ஆனால் கண்ட கண்ட நேரத்தில் கூப்பிட்டால் வரமாட்டார். காலம் தவறாமை முக்கியம். ஒரு நிமிஷத்தைக் கூட வீணடிக்கக் கூடாது. பகவானுடைய படைப்பிலே பார்! இயற்கையைக் கவனி. எல்லாம் காலம் தவறாமல் நியதிப்படி நடக்கிறதைக் காண்கிறாய், இல்லையா? காலம் தவறாமை இறைவனுக்கு மிகவும் பிடித்தமான விஷயம் என்பதை இதிலிருந்தே கற்றுக் கொள்ளலாமே!''

அவர் கரங்களில் தவழ்ந்து விளையாடிக் கொண்டிருந்த ஸ்படிக மாலை இப்போது இளைஞர் கழுத்தில் அணியப் பெற்று மார்பில் தொங்குகிறது. அதைச் சட்டைக்குள்ளே செருகி நெஞ்சோடு இருக்கத் தட்டிக் கொடுக்கிறார் பாபா.

இளைஞரிடம் ஆங்கிலத்தில் பேசிய பாபா, என்னிடம் தமிழில் பேசுகிறார். இன்னொருவரிடம் தெலுங்கில் ஏதோ மொழிகிறார், அப்படி பேசும் போதே இடையில், ''புரிகிறதா?'' என்று என்னைப் பார்த்துக் கேட்கிறார். எளிய சொற்களில் அமைந்த சில வாசகங்கள் புரிந்து போகின்றன. புரியாத போது நான் தலையசைக்கவும் மீண்டும் தமிழில் அதையே கூறுகிறார். 'இவையெல்லாம்தான் கல்கி வாசகர்களுக்கு நீ கேட்ட செய்தி' என்று அந்தக் கருணையும், பார்வையும் உணர்த்துகின்றன.

என் அருகே உள்ள ஒரு சிறுவனைக் கேட்கிறார்: ''ஒன்று பெரிதா? ஒன்பது பெரிதா?''

'ஒன்பது' என்கிறான் சிறுவன்.

''பள்ளிக்கூடக் கணக்குப்படி, நீ சொல்வது சரி. ஆனால் ஒன்றுடன் ஒன்று சேர்ந்தால் தான் இரண்டாகிறது. ஆக அந்த ஒன்றிலிருந்துதான் ஒன்பது தோன்றுகிறது. ஒன்றில்லாமல் ஒன்பது இல்லை. இருப்பது ஒரே கடவுள் தான். அந்த ஒன்றிலிருந்து ஒன்பது தோன்றியிருக்கலாம்; மக்கள் அவனைப் பல ரூபங்களில் வழிபடலாம்; ஆனால் மூலமானது ஒன்றே. இதைப் புரிந்து கொண்டால் மதப் பூசல்கள் ஏது? மதத் துவேஷம், ஜாதிப் பிரிவினை, ஏற்றத் தாழ்வு எண்ணங்கள் எதுவும் நம்மிடம் இருக்கக் கூடாது.''

மறுபடி விஞ்ஞானி பக்கம் திரும்புகிறார் பாபா. ''நீ விஞ்ஞானி; விஞ்ஞானம் என்பது என்ன? யோசித்திருக்கிறாயா?'' — கேட்டு விட்டு பாபாவே தொடர்கிறார்: ''விஞ்ஞானம் என்பது உண்மையை அறிவதற்கான முயற்சி. உண்மை அல்லது சத்தியம் என்பது என்ன? அது கடவுளுக்கு மறு பெயர்!''

இப்படி பாபா கூறியதுமே, புதிய புதிய உண்மைகளைக் கண்டு பிடிக்கும் விஞ்ஞானிகளுக்குத் தெய்வ நம்பிக்கை வளர்வதன் காரணம் நமக்குப் புரிந்து போகிறது. சந்திரனில் காலடி பதித்துத் திரும்பிய அமெரிக்க விண்வெளி வீரர் பாதிரியாராக மாறியது ஏன் என்று விளங்கி விடுகிறது.

**"Less Luggage; more Comfort** என்று ரயில்வே ஸ்டேஷன்களில் எழுதியிருப்பதைப் பார்த்திருக்கிறாயல்லவா? நமது ஏக்கங்கள், கோப தாபங்கள், கவலைகள், துயரங்கள் எல்லாவற்றுக்கும் அடிப்படைக் காரணம் ஆசை தான். ஆசைகளையும் அதன் விளைவான தேவைகளையும் குறைக்கக் குறைக்க வாழ்க்கைப் பயணம் சுகமாகிக் கொண்டே போகிறது!''

இப்படி எளிய உதாரணங்களால் பெரிய உண்மைகளைக் கூறுகிறார் பாபா என்றால் காரணம், தத்துவார்த்தமாகத் தடபுடல் ஆங்கிலத்தில் பேச அவருக்குத் தெரியாது என்பதல்ல. அப்படி பேசி எழுத வேண்டிய இடத்தில் செய்வார். ஒரு சமயம் சொன்னார்:

**"Duty without love is deplorable; Duty with love is desirable. Love without duty is Divine."**

முதல் இரண்டு அம்சங்களை எளிதிலேயே புரிந்து கொள்ள முடிந்தாலும் மூன்றாவது தெய்வீக விஷயத்தை எனக்குப் புரிந்து கொள்ள முடியவில்லை. அதென்ன கடமை இல்லாத அன்பு? கடமையைச் செய்யாமல் அன்பு மட்டுமே காட்டினால் போதுமா? இது பற்றி பாபாவிடம் கேட்டேன். கருணையோடு விளக்கினார்:

''கடமை என்ற உணர்வேயின்றி அதையே அன்பு மயமாகிச் செய்துவிடுவதைத்தான் அப்படி குறிப்பிடுகிறேன். உதாரணமாகத் தாய் குழந்தைக்குப் பாலூட்டுவது அவள் கடமைதான். ஆனால் கடமை என்று நினைத்து அவள் அதைச் செய்வதில்லை. அன்பு மயமாகிப் பாலூட்டுகிறாள். தெய்வ நிலைக்கு உயர்கிறாள். அப்படி நமது கடமைகளையும் அன்பு மயமாகிச்செய்யக்கூடுமானால் கடமை சுமையாகத் தெரியாது. அந்தப் பரிபக்குவத்தை எய்தும் போது நாம் கடவுள் தன்மையை எய்தியவர்களாவோம். புரிகிறதா? கடமை உணர்வு வெளியே இருந்து உள்ளுக்குப் பாய்வது. அன்புணர்வு உள்ளேயிருந்து பிரவகிப்பது!''

இன்னொரு பொன்மொழியை உதிர்க்கிறார் பாபா:



• மனிதாபிமானத்துக்காக மாணவர்கள் பாட்டுப் பூஜை இசை அமைக்கிறார்கள்.

''நேற்று என்பது நடந்து முடிந்து போன கதை. அதை எண்ணி ஏங்குவதாலோ திருப்தி அடைந்து விடுவதாலோ ஒரு பிரயோஜனமும் இல்லை. நாளை என்ன நடக்கும் என்பது உனக்குத்தெரியாது. எனவே அதைப் பற்றிக் கவலைப்பட்டுக் கொண்டிருப்பதிலும் அர்த்தமில்லை. ஆனால் நாளை நல்ல விளைவுகளை எதிர்நோக்கி இன்று நீ செயல்படுகிறாய் அல்லவா? இந்த நிகழ்காலம்தான் முக்கியம். எனவே இப்போது நீ என்ன செய்து கொண்டிருக்கிறாயோ அதனை முழுக் கவனத்துடன் அன்பு மயமாகிச் செய்!

''இந்த இளைஞர் மாதம் 60000 ரூபாய் வாங்குகிறார். அதற்கேற்ப இவர் உழைத்தாக வேண்டும். உழைப்பு குறைந்தால் இவர் சம்பாதிப்பவராயிருக்க மாட்டார்; தானம் பெற்றுக் கொண்டவராகி விடுகிறார்! ஒரு திருடன் சிறையிலிருந்து தப்பிவிடலாம்; ஆனால் மனச் சாட்சியிடமிருந்து யார் தப்ப முடியும்?''

இப்படி அறநெறிகளை மனத்தில் தைக்கும் படி பாபா கூறி வரும்போதே அவர் வலக்கை விரல்களுக்கிடையில் ஒரு மோதிரம் தோன்றி அதில் பதிக்கப் பெற்றுள்ள வைரம் பிரகாசமாக ஒளிர்கிறது. அது எப்படி எங்கிருந்து வந்தது? நமக்குப் புரியாத, விளங்கிக் கொள்ள இயலாத விஷயத்தை அது காரணமாகவே மறுப்பதும் சந்தேகிப்பதும், பரிகசிப்பதும் தவறு என்ற கொள்கை உடையவன் நான். இப்போதும் என் மனத்தில் ஓடுகிற எண்ணங்களுக்கு விளக்கம் தருவது போல் பாபா பேசுகிறார்: ''இந்த மோதிரம் எப்படி தோன்றியது? அந்த ஸ்படிக மணிமாலை எங்கிருந்து வந்தது? என்றெல்லாம் யோசித்து மனத்தைக் குழப்பிக் கொள்வது வீண் வேலை. இவை சங்கல்ப பலத்தினால் தோன்றுகின்றன. இதைப் புரிந்து கொள்ள வேண்டுமானால் சங்கல்ப பலம் உள்ளவர்களால்தான் முடியும். 'விவேகானந்தரைப் புரிந்து கொள்ள விவேகம் வேண்டும்' என்று கூற வேண்டிய சந்தர்ப்பம் விவேகானந்தருக்கே இருந்திருக்கிறது.''

''இந்த அற்புதங்களையெல்லாம் விடப் பெரிய அற்புதம் நீங்கள் புட்டபர்த்தியைக் கலைவாணியின் வாசஸ்தலமாக உருமாற்றியிருப்பதும், வேறு பல மனிதாபிமானப் பணிகளை நிறைவேற்றி வைத்திருப்பதும் தான் என்று எனக்குத் தோன்றுகிறது'' என்பதாக நான் கூறி முடிக்கு முன்னரே,

''நான் நிகழ்த்தும் அற்புதங்கள் எதுவும் முக்கியமில்லை'' என்கிறார் பாபா. ''என் அன்பை நீ உணர்கிறாயா? அதுதான் முக்கியம்! அந்த அன்புதான் நீ குறிப்பிடும் சாதனைகளையெல்லாம் நிறைவேற்றியது. அந்த அன்புதான் நிலையானது!''

இந்தக் கணத்தில் பாபா எனக்கும் பகவான் ஆனார். ''மாந்தருக்குள் ஒரு தெய்வம்'' என்று தாம் எழுதிய காந்திஜியின் வாழ்க்கை வரலாற்றுக்குத் தலைப்புத் தந்தார் கல்கி. ''காந்தியைத் தெய்வமாக்க வேண்டுமா?'' என்று சிலர் கேட்கவும், ''காந்தியை மனிதர் என்போமானால், நம்மையெல்லாம் என்னவென்று கூறிக் கொள்வது?'' என்று திருப்பிக் கேட்டார் கல்கி. அந்த அர்த்தம் பொதிந்த மெலிதான நகைச்சுவை இப்போது எனக்கு நினைவு வர, பகவானை ஏறிட்டு நோக்கினேன்.

''ஏதாவது கேட்க வேண்டுமா?'' என்று பகவான் வினவியவாறே மோதிரத்தை எனக்கு அணிவித்தார். ''அளவு பார்க்கவில்லை; பொற் கொல்லரைத் தேடவில்லை; ரெடிமேட்!'' என்று கூறிச் சிரித்தார்.

''நீங்கள் செய்த உபதேசங்களின்படி நடக்க திட சித்தத்தை அருள வேண்டும்'' என்றேன்.

''க்ஷேமமாய் இருப்பாய்'' என்றார்.

அதையே கல்கி வாசகர்கள் அனைவருக்கும் பகவான் ஸ்ரீ சத்ய சாயி பாபாவின் ஆசிகளாகச் சமர்ப்பிக்கிறேன். கல்கி வாசகர்களின் க்ஷேம நலனுடன், கல்கி ஸ்தாபனத்தின் க்ஷேம நலன் இரண்டறக் கலந்திருக்கும் ஒன்றல்லவா!

— கி. ராஜேந்திரன்

புகைப்படங்கள்: ஜே. ஹரிஹரன்

* எதிர்ப்பக்கம்: பிரசாந்தி நிலையத்திலுள்ள பூஜா இரதத்தின் உட்புறத் தோற்றங்கள்.

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of, Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600032 (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani

Editor: K. Rajendran

# காலைப் புதுமை மாலைவரை நீடிக்கச் செய்யுங்கள்!

புதியது




ண்மையான புத்துணர்ச்சி. மற்ற சோப்புகள் தரும் றைந்த நேர புத்துணர்ச்சி அல்ல. நாள் முழுவதும் உடலின் வியர்வை நாற்றமின்றி திகழும் புத்துணர்ச்சி! புதிய ஸின்த்தால் மட்டுமே அதனைத் தரவல்லது. இப்போது, ஒரு புதிய அற்புத நறுமணம் ஸின்த்தாலில் உள்ளது.

மேலும் அதன் சக்திவாய்ந்த வியர்வை துர்நாற்றம் போக்கும் தன்மை, சரும ிருமிகளை ஒழித்து உங்களை நாள் முழுவதும் நாற்றமின்றி புத்துணர்ச்சியுடன் வைத்திடும்.




**ஸின்த்தால்** மட்டுமே

உங்களை புத்துணர்ச்சியுடன் வியர்வை நாற்றமின்றி நாள் முழுவதும் வைத்திடும்.

Godrej